

# அம்ருதா
AMRUDHA

வேள்வி 14 கலசம் 167
Volume 14 Issue 167

அக்டோபர் 2021 ரூ. 25
October 2021 Rs.25

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்
A Monthly Magazine of Art, Literature and Social criticism

பிரான்சிஸ் கிருபா

பாவண்ணன்

டி. கண்ணன்

பொ. கருணாகரமூர்த்தி

அ. முத்துலிங்கம்

வைதீஸ்வரன்

மிலன் குந்தேரா

ராம் முரளி

பாலை நிலவன்

விட்டல்ராவ்

ஷங்கர்ராமசுப்ரமணியன்

கலாப்ரியா

கேள்வி 14 கலசம் 167



அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

அக்டோபர்-2021 விலை ரூ. 25



அம்ருதா

#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ

சக்திநகர், போரூர், சென்னை-600116

தொலைபேசி: -044-2435 3555, 94440 70000

மின்னஞ்சல்: info.amrudha@gmail.com

இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak

No. 5, 5th Street

Somasundaram Avenue

Shakthi Nagar, Porur

Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf of AMRUDHA

Ayyanar Offset, No. 10 Subbarao Nagar

Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒமிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்


# இந்த இதழில்....



அட்டைப் படம்: புதுவை இளவேனில்

## நீட்

# சமூக நீதிக்கு இழைக்கப்பட்ட அநீதி

பிரபு திலக்

மருத்துவக் கல்லூரி மாணவர் சேர்க்கைக்கான 'நீட்' நுழைவுத் தேர்வு குறித்து தமிழ்நாடு அரசு அமைத்த ஏ.கே. ராஜன் குழுவின் அறிக்கை வெளியாகியுள்ளது. மாநில பாடத்திட்ட மாணவர்களின், குறிப்பாக கிராமப்புற, அரசுப் பள்ளி மாணவர்களின் மருத்துவர் கனவை 'நீட்' தகர்த்துள்ளதாக ஏற்கெனவே சொல்லப்பட்டு வந்ததை இந்த அறிக்கை புள்ளி விவரங்களுடன் உறுதிப்படுத்தியுள்ளது.

இந்த அறிக்கையில், 'நீட் தேர்வு' முறையை ஆராய்ந்த ஏ.கே. ராஜன் குழு, அதில் உள்ள பல்வேறு பிரச்சினைகளையும் சுட்டிக்காட்டியுள்ளது. "நீட் தேர்வானது, ஒரு மாணவரிடம் படிப்படியாக மேம்படும் கல்வித் திறமைகளைக் கணக்கில் கொள்வதில்லை. கற்றுக்கொள்வதற்குப் பதிலாக, ஒரு குறிப்பிட்ட தேர்வு முறையில் தேர்ச்சியாவதையே இந்த தேர்வு முறை முன்வைக்கிறது

கலாசார ரீதியாக, பிராந்திய ரீதியாக, மொழி ரீதியாக, சமூக பொருளாதார ரீதியாக இந்த தேர்வு முறை பாரபட்சமாக இருக்கிறது. 2010-2011இல் மருத்துவ கல்வியில் மாநிலக் கல்வி வாரியத்தின் கீழ் படித்தவர்களில் 2,332 பேருக்கு இடம் கிடைத்தது; சிபிஎஸ்இ மாணவர்கள் 14 பேர்தான் சேர்ந்தார்கள். ஆனால், 'நீட் தேர்வு' அறிமுகமான பிறகு இது வெகுவாக மாறியது. 2020-2021இல் சிபிஎஸ்இயில் படித்த 1,604 பேர் மருத்துவ கல்வியில் சேர்ந்தார்கள். சிபிஎஸ்இ பாடத்திட்டத்தின் கீழ் படித்தவர்களுக்கு 'நீட் தேர்வு' வெகுவாக உதவியிருப்பதை இந்தப் புள்ளிவிவரம் சுட்டிக்காட்டுகிறது.

'நீட் தேர்வு' அறிமுகப்படுத்தப்படுவதற்கு முன்பாக, தமிழ்வழியில் படித்த 19.79 சதவீத மாணவர்களுக்கு மருத்துவக் கல்வியில் இடம் கிடைத்தது. ஆனால், 'நீட் தேர்வு' அறிமுகப்படுத்தப்பட்ட பிறகு, தமிழ் வழியில் படித்த 1.99 சதவீத மாணவர்களுக்கே இடம் கிடைத்துள்ளது. அதேநேரம் ஆங்கில வழி மாணவர்களின் சதவிகிதம் 69.53% ஆக உயர்ந்துள்ளது.

'நீட் தேர்வு' அறிமுகப்படுத்தப்படுவதற்கு முன்பு, 2016-17இல் அரசுக் கல்லூரிகளில் உள்ள இடங்களில் 65.17% இடங்களைக் கிராமப்புற மாணவர்களே பெற்றனர்; ஆனால், 2020-2021இல் இது 49.91% ஆகக் குறைந்துள்ளது.

முதல் தலைமுறை மாணவர்கள் மருத்துவ கல்லூரிகளில் சேருவதையும் இந்தத் தேர்வு வெகுவாகக் குறைத்திருக்கிறது. 2016-17இல் மருத்துவ கல்வி இடங்களைப் பெற்றவர்களில் 24.94 சதவீதம் பேர் முதல் தலைமுறை மாணவர்கள். ஆனால், 2020 - 21ல் இந்த சதவீதம் 14.46ஆகக் குறைந்திருக்கிறது.

'நீட் தேர்வு' வந்த பிறகு, பல முறை தேர்வு எழுதி எம்பிபிஎஸ் இடங்களைக் கைப்பற்றுவதும் வெகுவாக அதிகரித்திருக்கிறது. 2010-11இல் மருத்துவக் கல்லூரியில் இடம் பிடித்தவர்களில் 92.85% பேர் முதல் முறையாக தேர்வு எழுதியவர்கள். ஆனால், 2020-21இல் இது 28.58%ஆகக் குறைந்துள்ளது. மீண்டும் மீண்டும் தேர்வெழுதியவர்களே 71.42% இடங்களைப் பிடித்துள்ளனர்.

'நீட் தேர்வு'க்கு முந்தைய மருத்துவர்கள், பிந்தைய மருத்துவர்கள் எனப் பிரித்துப் பார்த்தால், 'நீட் தேர்வு'க்குப் பிந்தைய மருத்துவர்கள் அனைவரும் வசதியான, நகர்ப்புறங்களைச் சேர்ந்தவர்களாக இருக்கின்றனர்.

இந்த புள்ளிவிவரங்களில் இருந்து நீட் தேர்வானது, பலதரப்பட்ட சமூகங்களின் பிரதிநிதித்துவத்தை மருத்துவக் கல்வியில் குலைப்பது உறுதியாகிறது. சமூகத்தில் வசதியான பிரிவினருக்குச் சாதகமாக இருப்பதோடு, பின்தங்கிய நிலையில் இருப்பவர்களின் மருத்துவக் கனவைக் குலைக்கிறது. குறிப்பாக தமிழ் வழியில் படித்தோர், கிராமப்புறங்களை சேர்ந்தவர்கள், அரசுப் பள்ளிகளில் படித்தவர்கள், 2.5 லட்ச ரூபாய் வருமானத்திற்குக் கீழே உள்ளவர்கள், மிகவும் பிற்படுத்தப்பட்டோர், பட்டியலினத்தினர், பழங்குடியினர் ஆகியோர் இந்தத் தேர்வால் மிகவும் பாதிக்கப்படுகின்றனர்.

'நீட் தேர்வு' இன்னும் ஒருசில ஆண்டுகள் தொடர்ந்து நடந்தால், தமிழ்நாட்டின் சுகாதார கட்டமைப்பு கடுமையாகப் பாதிக்கப்படும். ஆரம்ப சுகாதார நிலையங்களுக்குத் தேவையான மருத்துவர்கள் பற்றாக்குறை ஏற்படும். அரசு மருத்துவமனைகளில் பணியாற்ற மருத்துவ நிபுணர்கள் போதிய அளவில் கிடைக்க மாட்டார்கள். மொத்தத்தில், நாடு சுதந்திரம் அடைவதற்கு முந்தைய நிலைக்கு தமிழ்நாடு திரும்பலாம். சுகாதார கட்டமைப்பு தரவரிசையில் பிற மாநிலங்களுக்குக் கீழ் தமிழ்நாடு செல்லும் நிலையும்

ஏற்படலாம்" என்று ஏ.கே. ராஜன் குழு அறிக்கை எச்சரித்துள்ளது.

பல முறை தேர்வு எழுதியவர்களே எம்பிபிஎஸ் இடங்களைக் கைப்பற்ற முடியும் என்றால், சாமானிய, கிராமப்புற ஏழை மாணவர்கள் எப்படிச் சேர முடியும்? பயிற்சி மையங்களுக்கு ஆயிரக்கணக்கில் செலுத்த அவர்களிடம் பணம் ஏது? கிராமப்புற ஏழை மாணவர்களால் பயிற்சி மையங்களுக்குப் பணம் செலுத்தி நுழைவுத் தேர்வு பயிற்சி பெற முடியாது என்பதால்தான் பேராசிரியர் மு. ஆனந்தகிருஷ்ணன் குழுவின் பரிந்துரையின் பேரில் தமிழ்நாட்டில் 2006ஆம் ஆண்டில் 'நுழைவுத்தேர்வு ரத்து சட்டம்' நிறைவேற்றப்பட்டு அதற்குக் குடியரசுத் தலைவரின் ஒப்புதலும் பெறப்பட்டது குறிப்பிடத்தக்கது.

இவை ஒருபக்கம் இருக்க ஆள் மாறாட்டம், வினாத்தாளைக் கைப்பற்றுவது போன்ற முறைகேடுகளுக்கும் 'நீட்' தேர்வு முறை அதிகம் வாய்ப்பளிக்கிறது. இந்த முறைகேடுகளும் சேர்ந்து அப்பாவி மாணவர்களிடம் பெரும் அழுத்தத்தையும் பதற்றத்தையும் உருவாக்குகின்றன. இதன் காரணமாகவே தமிழ்நாட்டில் அனிதா தொடங்கி சௌந்தர்யா வரை 16 பேர் தங்களை மாய்த்துக்கொண்டுள்ளனர். இனியும் இது தொடராமல் இருக்க 'நீட்' தேர்விலிருந்து விலக்கு பெறுவது அவசியம் என்பதைப் பலரும் தெரிவித்துவிட்டனர்.

நீட் தேர்வு இந்தியக் கூட்டாட்சி முறைக்கும் எதிரானதாகும். இதை உச்ச நீதிமன்றமே கூறியுள்ளது. 'நீட் தேர்வு' முதன்முதலில் காங்கிரஸ் ஆட்சி காலத்திலேயே குலாம் நபி ஆசாத் மத்திய சுகாதாரத் துறை அமைச்சராக இருந்த பொழுது, இந்திய மருத்துவ கழகத்தின் பரிந்துரை மூலம் அறிமுகப்படுத்தப்பட்டது. அப்போதே பல மாநிலங்கள் நீட் நுழைவுத் தேர்வை ஏற்காமல் உச்ச நீதிமன்றம் சென்றன. அப்படி உச்ச நீதிமன்றம் சென்ற மாநிலங்களில், இன்றைய பிரதமர் மோடி அப்போது முதலமைச்சராக இருந்த குஜராத்தும் அடக்கம்.

2013இல் அந்த வழக்குகளை விசாரித்த நீதிபதி அல்தாமஸ் கபீர் தலைமையிலான மூன்று நபர் கொண்ட உச்ச நீதிமன்ற அமர்வு இந்திய மருத்துவ கழகம் பரிந்துரைத்த 'நீட் தேர்வு'க்கு தடை விதித்தது. அந்த அமர்விலிருந்த நீதிபதிகள் அல்தாமஸ், விக்ரம்ஜித் இருவரும், "இந்திய மருத்துவ கழகமோ அல்லது வேறு எந்த ஒன்றிய அரசுக்குச் சொந்தமான நிறுவனமோ, எந்தவொரு மாநிலத்தில் நடக்கும் கல்லூரி நுழைவையும் தீர்மானிக்கும் அதிகாரம் பெற்றதல்ல. ஏனெனில், ஒவ்வொரு மாநில அரசின் மருத்துவக் கல்லூரிகளும் அந்தந்த மாநில அரசுகளால் உருவாக்கப்பட்டு நிர்வகிக்கப்படுபவை. அதற்கான உரிமையை இந்திய அரசியல் சாசன சட்டம் எல்லா மாநிலங்களுக்கும் தந்திருக்கிறது. அப்படி தலையிட நினைப்பது ஒரு மாநிலத்தின் கல்வி உரிமையிலும் தலையிடுவதாகும். அது இந்தியக் கூட்டாட்சி முறைக்கு எதிரானதாகும்" என்று கூறியிருந்தனர்.

அவர்கள் கூறியது போல், பன்முகத்தன்மை கொண்ட இந்தியாவில் 'நீட் தேர்வு' போன்ற ஒரு பொது நுழைவுத் தேர்வு நியாயமானதாக இருக்காது என்பதையே ஏ.கே. ராஜன் குழு அறிக்கையும் உறுதிப்படுத்துகிறது.

மருத்துவப் படிப்புகளோடு அகில இந்திய பொது நுழைவுத் தேர்வு என்னும் இந்த அபாயம் நின்று விடாது. வரும் ஆண்டுகளில் பொறியியல் படிப்புகளுக்கும் அகில இந்திய நுழைவுத்தேர்வைக் கொண்டு வருவதற்கான முயற்சிகள் தொடர்ந்து வருகின்றன. இன்னொருபக்கம் சமீபத்தில், அகில இந்தியத் தொழில்நுட்பக் கல்விக் குழு தலைவர் அனில் சஹஸ்ரபுதே, "கலை, அறிவியல் மற்றும் பொறியியல் படிப்புகளில் சேர பொது நுழைவுத் தேர்வு நடத்துவது தொடர்பாக ஆலோசிக்கப்பட்டு வருகிறது. கணிதம், இயற்பியல், வேதியியல் ஆகிய முக்கிய படிப்புகளில் சேரும் மாணவர்களின் அடிப்படைக் கற்றல் திறனைச் சோதிப்பது தேவையாக உள்ளது" என்று கூறியுள்ளது குறிப்பிடத்தக்கது.

பொதுப் பட்டியலில் உள்ள கல்வியும் மருத்துவக் கல்வியும் மாநிலப் பட்டியலுக்கு மாறாத வரை இந்த ஆபத்து வளர்ந்துகொண்டே இருக்கும். எனவே, கல்வியையும் மருத்துவக் கல்வியையும் மீண்டும் மாநிலப் பட்டியலுக்கு மாற்ற வேண்டும் என்பது இன்றைய காலத்தின் தேவையாகும்.

ஏ.கே. ராஜன் குழு அறிக்கை வெளியானதைத் தொடர்ந்து, வங்காள மக்களின் தேசிய அமைப்பான பங்ளா பொக்கோ, கொல்கத்தாவில் 'நீட்' தேர்வுக்கு எதிரான மாபெரும் ஆர்ப்பாட்டத்தை நடத்தியது. இந்த ஆர்ப்பாட்டத்தில், "நீட் என்பது மாநில கல்விக்கு எதிராக, ஏழைகளுக்கு எதிராக, நடுத்தர வர்க்கத்திற்கு எதிராக, கிராமப்புற மக்களுக்கு எதிராக உள்ளது. இந்தி பேசும் மாநிலங்களில் இருக்கும் நீட் பயிற்சி மையங்கள், தேசியத் தேர்வு முகமை, சிபிஎஸ்இ ஆகியவை கூட்டு வைத்துக்கொண்டு தமிழ்நாடு, மேற்கு வங்காளம் போன்ற இந்தி பேசாத மாநிலங்களைச் சேர்ந்த மாணவர்களின் மருத்துவக் கனவைத் திருடுகிறது" என்று பங்ளா பொக்கோ அமைப்பின் பொதுச் செயலாளர் கார்கா சாட்டர்ஜி கூறியுள்ளார்.

மகாராஷ்டிராவிலும் நீட் பாதிப்பு குறித்து ஆய்வு செய்யப்படும் என அம்மாநில அரசு தெரிவித்துள்ளது. இதுகுறித்து மகாராஷ்டிரா மருத்துவக் கல்வித் துறை அமைச்சர் அமித் தேஷ்முக், "தமிழ்நாடு நீட் தேர்வை அகற்ற நடவடிக்கை எடுத்துள்ளது. இதன் விளைவாக, நீட் தேர்வு மாநிலங்களுக்கு சரியானதா, மாணவர்களின் நலனுக்கு சிறந்ததா என விவாதங்கள் எழுந்துள்ளன. நீட் தேர்வில் வெற்றிபெறும் சிபிஎஸ்இ மாணவர்களின் எண்ணிக்கை அதிகரித்துள்ளது. கேள்வித்தாள்களும் கசிந்து வருகின்றன. தேர்வில் பங்கேற்கும் போலி மாணவர்கள் குறித்தும் தகவல்கள் வந்துள்ளன. நீட் தேர்வு மாணவர்களுக்கு நன்மையா தீமையா என்பது குறித்து விவரங்கள் சேகரிக்கப்பட்டு ஆய்வு நடத்தப்படும்" என்று தெரிவித்துள்ளார்.

கல்வியை மாநிலப் பட்டியலுக்கு மாற்றும் முயற்சிகள் முன்னெடுக்கப்பட வேண்டும். அதற்கு, நீட் தேர்வுக்கு எதிரான இதுபோன்ற மற்ற மாநிலங்களின் குரல்களை ஒன்றிணைப்பதில் இனி தமிழ்நாடு கவனம் செலுத்த வேண்டும். ●

ஜெ. பிரான்சிஸ் கிருபா

[03.12.1970 - 16.09.2021]

# இனி வாதைகள் உன்னை அணுகாது பிரான்சிஸ்

## ஷங்கர்ராமசுப்ரமணியன்

ஒருவரின் மரணத்தை ஏற்கமுடியாத நிலையில், அவர் செத்து நாம் இருப்பதின் வினோதத்தை புரிந்துகொள்ள முடியாமல்தான் அந்த மரணத்தைச் சுற்றி காரண, காரியங்களை வைத்துப் பேசுவதற்குத் தொடங்குகிறோம். ஆனால், பகுத்துப் பகுத்துப் பார்த்தாலும் எஞ்சும் ஒரு ரகசியம் மரணத்தைச் சுற்றி இருக்கிறது; அதனால்தான் தொன்றுதொட்டு பயங்கரமாக இருக்கிறது. 16-09-2021 அன்று இரவு கோவை ரயிலில் 10.10 மணிக்கு ஏறி கிளம்பி, வண்டியின் அசைவில் கண்ணயர்ந்திருந்த போது, கவின்மலர் தொலைப்பேசியில் அழைத்தபோதே மிகத் துயரகரமான சம்பவம் ஒன்று என்று தெரிந்துவிட்டது. "பிரான்சிஸ் போய்விட்டார்" என்று சொல்லிவிட்டு ஏதோ சில வார்த்தைகள் பேசிவிட்டு, இன்னொரு தொலைப்பேசி வருவதாகச் சொல்லிவிட்டு, துண்டித்துவிட்டார். சில மாதங்களுக்கு முன்னர் கவினை அழைத்து கொண்டு வடபழனி நூறடி ரோட்டில் பிரான்சிஸ் தங்கியிருந்த அறைக்குச் சென்று பார்த்ததுதான் கடைசிமுறை. கொஞ்சம் உடல்நலம் தேறிய, குடிக்காத பிரான்சிஸுடன் சில மணிநேரங்கள் பேசிவிட்டு வந்தது ஆறுதலான ஞாபகமாக இருக்கிறது.

சென்னையில் பிரான்சிஸ் கிருபாவை, 'காமராஜர்' திரைப்படத்தை இயக்கிய பாலகிருஷ்ணன் அலுவலகத்தில் சந்தித்ததுதான் முதல் ஞாபகமாக எனக்கு உள்ளது. இரண்டாயிரமாவது ஆண்டுக்குப் பிறகு, எனது தொகுதி வெளிவந்த பிறகு அவரை கவிஞர் விக்ரமாதித்யன் அண்ணாச்சியுடன் சந்தித்தேன். கோடம்பாக்கம் காம்தார் நகரில் முதல் மாடியிலிருந்த அலுவலகத்திற்கு நாங்கள் காலை 10 மணிவாக்கில் படியேறிச் சென்றபோது அங்கே பிரான்சிஸ் கிருபா மட்டுமே இருந்தார். அவருக்கும் விக்கிக்கும் ஏற்கெனவே பரிச்சயம் என்று பேசிக்கொண்டிருந்ததில் தெரிந்தது. 'மெசியாவின் காயங்கள்' தொகுப்புக்கான கவிதைகளை அண்ணாச்சியிடம் அவர் காண்பித்தார். பிரான்சிஸ் அவரிடம் பேசப் பேச அண்ணாச்சியின் முகத்தில் ஏதோ கலவரத்தைப் பார்த்தேன். எனக்கு வேறுமாதிரி தெரியாத நிலையில் மூலையிலிருந்த மரத்தில் செய்யப்பட்ட இடுப்பளவு உயரமுள்ள கண்ணாடி கதவுள்ள புத்தக அலமாரியிலிருந்த புத்தகங்களை துழாவிக் கொண்டிருந்தேன். அங்கே ஜே. கிருஷ்ணமூர்த்தியின் புத்தகங்கள் சில அருமையான பைண்டிங்கில் கிடைத்தன. பிரான்சிஸிடம், "இதைப் படிக்க எடுத்துக் கொள்ளலாமா" என்று கேட்டேன். பிரான்சிஸ் என்னிடம், "நீங்கள் உங்களுக்கே வைத்துக் கொள்ளுங்கள்" என்று சொன்னார். நான் எடுத்து நன்றியுடன் பக்கத்தில் வைத்துக்கொண்டேன். அண்ணாச்சியும் பிரான்சிஸ் கிருபாவும் மொட்டை மாடிக்கு சிகரெட் பிடிப்பதற்குச் சென்றனர். பிரான்சிஸ் அண்ணாச்சியிடம் தொடர்ந்து பேசிக் கொண்டிருந்தார். அண்ணாச்சி தலையை ஆட்டியபடி தன் பாணியில் கேட்டு கொண்டேயிருந்தார்.

பிரான்சிஸ் கையெழுத்தில் கவிதைகள் உள்ள காகிதங்களை நானும் படித்தேன். எனக்கு கலாப்ரியாவும் யூமா வாசுகியும் சேர்ந்த தாக்கத்தில் பிரான்சிஸின் கவிதைகள் இருப்பதாகப் பட்டது. அதை உடனடியாக தெரிவிக்கவும் செய்தேன் என்று நினைக்கிறேன்.

12 மணி இருக்கும். பாலகிருஷ்ணன் அலுவலகத்துக்கு வந்தார். மொட்டை மாடியில் திறந்திருந்த கடைசி அறையில் நாங்கள் உட்கார்ந்திருப்பதைப் பார்த்து வரவேற்று என்னையும் அறிமுகப்படுத்திக் கொண்டார். எனக்குப் பக்கத்தில் இருக்கும் புத்தகங்களைக் காண்பித்து இவை என்ன என்று கேட்டார். "பிரான்சிஸ் எனக்குக் கொடுத்திருக்கிறார்" என்று சொன்னேன். அண்ணாச்சியைப் பார்த்த பாலகிருஷ்ணன், "இப்படித்தான் அண்ணாச்சி செய்கிறார்" என்று புகாரைத் தொடங்கினார்.

பிரான்சிஸ் சில நாட்களாக மனநலம் பாதிக்கப்பட்ட நிலையில் இருக்கிறார் என்றும், அவர் குடியிருக்கும் தெருவில் அதற்கு முந்தின நாள் வீடுகளின் கதவுகளைத் தட்டி பிரச்சினையை ஏற்படுத்தியதையும் கூறினார். பிரான்சிஸ் அமைதியாக தனக்கு மேல் வைக்கப்பட்ட



புகார்களைக் கேட்டுக் கொண்டிருந்தார். இந்தப் புத்தகங்கள் தன்னுடைய சேகரிப்பு என்று என்னைப் பார்த்துக் கூறினார் பாலகிருஷ்ணன். இப்படி நான் இல்லாத வேளையில் செய்துகொண்டிருந்தால் தொடர்ந்து தான் எப்படி கிருபாவை அனுமதிக்க முடியும் என்று விக்ரமாதித்யனிடம் நியாயம் கேட்டார். விக்ரமாதித்யன், பிரான்சிஸுக்கு ஏதாவது ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கரிசனத்துடன் கூறிக்கொண்டிருந்தார். நான் அறைக்கு எடுத்துச் செல்ல வைத்திருந்த கிருஷ்ணமூர்த்தியின் நூல்களைத் திரும்ப எடுத்த அலமாரியிலேயே அடுக்கிவைத்தேன். விக்ரமாதித்யன் வெளியே என்னை மாலையில் கூட்டிச் செல்லும்போதுதான், பிரான்சிஸ் அவரிடம் பேசிய அத்தனையும் புனைவு என்றும், என்ன செய்வது என்று தெரியவில்லை என்றும் புலம்பினார். பிரான்சிஸ் அதற்கு அடுத்து சில மாதங்கள் ஊருக்குப் போய்விட்டு ஓரளவு நன்றாகத் திரும்பினார் என்று நினைவு.

இப்படியான அபத்தமான நிகழ்வொன்றில்தான் பிரான்சிஸ் எனக்கு அழுத்தமாக அறிமுகமானார்.

பிரான்சிஸின் கவிதைகள் சார்ந்து அதீதமான ரொமாண்டிக் என்ற எண்ணமும் விலக்கமுமே எனக்கு மிகச் சமீபகாலம் வரை இருந்தது. விக்ரமாதித்யன், ‘மெசியாவின் காயங்கள்’ தொகுப்புக்குப் பிறகு வந்த பிரான்சிஸின் கவிதைகளைக் கொண்டாட ஆரம்பித்திருந்தார். வழக்கமான பொறாமையுடன் அவர் சொல்வதைக் கேட்டபடி அலட்சியப்படுத்துவேன். ‘மல்லிகை கிழமைகள்’ போன்ற கவிதைகள் எனது எண்ணத்துக்குக் கூடுதல் வலுசேர்த்தன. தனிப்பட்ட வகையிலும் பிரான்சிஸுடன் ஒவ்வாமையுடனேயே நான் அப்போது இருந்தேன். நல்வாழ்வுக்கான ருசி மற்றும் ஏக்கத்துடன் குறைந்தபட்ச ஒழுங்குகளைத் தக்கவைக்கப் போராடியபடி பயணித்த எனக்கு அழிவை நோக்கி, சிதைவை நோக்கி வசீகரமாகப் பயணித்த பிரான்சிஸை நெருங்கவேயில்லை.

‘சக்தியின் கூத்தில் ஒளியொரு தாளம்‘ தொகுதியை மிகச் சிறந்த தொகுதி என்று விக்ரமாதித்யன் சொல்ல, அதை வாங்கிக் கொண்டுவந்து ஒரு முறை இரவில் வாசித்துவிட்டுப் படுத்தேன். ஏற்கெனவே இருந்த ஒவ்வாமை, விலக்கத்துக்குக் கூடுதல் நியாயம் கிடைத்த நிம்மதியில் உறங்கப் போனேன். நள்ளிரவில் நனவுக்கும் கனவுக்கும் நடுவே உள்ள நிலையில் பிரான்சிஸின் கவிதைகளிலிருந்த பிம்பங்கள், படங்கள் எல்லாம் பயங்கரத்தின் ஒளியுடன் என் மனத்தில் ஆடத்தொடங்கின. மணி இரண்டரையோ மூன்று



மணியோ இருக்கலாம். திரும்ப எழுந்து கவிதைத் தொகுப்பை வாசிக்கத் தொடங்கினேன். அந்த அகால நேரத்தில் தொகுப்பு முழுக்கத் தன்னைத் திறந்துகொண்டது.

இந்தத் தொகுப்பில் பிரான்சிஸின் மொழியுலகம் இரண்டாக உடைந்திருந்தது. சிதைவு, அழிவு, நோய்மையின் அனுபவங்களை எழுதும்போது சர்ரியலான ஓவியங்களை உருவாக்கியிருந்த கவிதைகளை முழுக்க வசனமாகவே எழுதியிருந்தான் பிரான்சிஸ். தொலைந்த காதல், ஏக்கம் என்ற உள்ளடக்கத்துக்கு வரும்போது இசைமையோடு தனது பழைய ஈர நிலத்தில் பயணிக்க முயன்றிருந்தான். கற்பனை உச்சம் கொண்ட புனைவால், மொழியால் உருகொண்ட அத்தொகுப்பு குறித்து இரண்டு கட்டுரைகளை எழுதினேன். பிரான்சிஸைப் பற்றிய புரிதலுடன் சேர்ந்து அவரை இணக்கமாக உணர்ந்தேன். பிரான்சிஸும் தொலைப்பேசியிலும் நேர்ப்பேச்சுகளிலும் என்னிடம் மிகுந்த வாஞ்சையுடன் இருந்தார். டிஸ்கவரி புக் பேலஸ் வெளியிட்ட மொத்த கவிதைத் தொகுதிகளில் உள்ள எனக்குப் பிடித்த கவிதைகள் குறித்து தனித்தனியாக எழுதவேண்டுமென்ற எண்ணம் உண்டு.

பிரான்சிஸ் கிருபாவின் 'கன்னி' நாவலுக்குள் என்னால் இன்னும் செல்ல முடியவில்லை. ஆனால், நான் மதிக்கும் சிறந்த வாசக நண்பர்கள், தோழிகள் 'கன்னி' நாவலின் அனுபவம் வழியாக அவரை கிறிஸ்துவாகவே ஆராதிக்கிறவர்கள். பெண்களுக்குக் கிறிஸ்துதான் வேண்டும்; கிறிஸ்துவை விட சற்று மாற்று குறைந்தவர்கள் யாரையும் அவர்கள் விரும்பமாட்டார்கள்தானே.

பிரான்சிஸ் கிருபா அடைந்த மனவாதைகளுக்கும் அகால மரணத்துக்கும் காரணம் ஒரு புராதனமான காதல் என்று யூகிக்க முடிகிறது. ஒற்றை இதயத்தை அடைக்கலமாக நாடிய இடத்தில்தான் அவனுக்கு மரணமுடிச்சு விழுந்திருக்கும் என்று கருதுகிறேன். அவன் குடியில் மூழ்கியதற்கான காரணத்தை முன்வைத்து எழுதிய கட்டுரை ஒன்றில் அதற்கான குறிப்புகள் உள்ளன. 'மணல் புத்தகம்' இதழுக்காக எழுதி பின்னர் ஒரு நூல் தொகுப்பில் அந்தக் கட்டுரை வெளியானது. மும்பை தாராவியின் பின்னணியில் எழுதப்பட்ட அந்தக் கட்டுரை அனுராக் காஸ்யப் போன்றவர்கள் சினிமாவாக எடுப்பதற்கு ஏற்ற சிறந்த கதை. கன்னிக்கு முன்னர் நடத்திய ஒத்திகையாக இருக்கலாம்.

பொதுவான இலக்கிய வாசகர்களாக அல்லாமல், ஆனால், பிரான்சிஸின் படைப்புகளை மட்டுமே படிக்கும் வெறிகொண்ட நிறைய வாசகர்கள், வாசகிகள் பிரான்சிஸ் அளவுக்கு சமகாலத்தில் யாருக்கும் இருப்பார்களா என்று தெரியவில்லை. 'கன்னி' வழியாக ஒரு கிறிஸ்துவாக மாறிய பிரான்ஸிஸ் கிருபாவை, கோயம்பேடு பேருந்து நிலையத்தில் நடந்த சம்பவம் கூடுதல் கிறிஸ்துவாக்கியது. நண்பர்கள் அனைவரது ஆசையால், அவர்களது விருப்பத்தை முன்னிட்டே, மிகவாதையுற்ற தனது கடைசி ஆண்டுகளை பிரான்சிஸ் வாழ்ந்து முடித்திருக்கிறான். நான் பிரான்சிஸைப் பார்க்கும்போது அவனுக்கு வாழ்வதற்கான விருப்பமோ, உந்துதலோ எதுவுமே இல்லை. இந்தப் பூமியில் தரித்திருப்பதற்கு நம்மிடம் இருக்கும் எல்லா மூலதனங்களையும் நப்பாசைகளையும் அவன் அடித்துவிரட்டியிருந்தான். அவனை அச்சுறுத்திய மனப்படங்களிலிருந்து தப்பிக்க அவன் குடித்து குடித்து உடம்பைப் பலவீனமாக்கி மீண்டும் குடிக்கவே முடியாத நிலைக்கு ஆட்பட்டிருந்தான். ஆனால், மனவாதையை என்ன செய்வது என்று அவனுக்குத் தெரியாத திகைப்பு இருந்தது. சுற்றியுள்ளவர்கள் தான் உயிருடன் இருக்க விரும்புவதைப் பார்த்து அவன் கேலிச்சிரிப்பு சிரித்தபடி பார்த்துக் கொண்டிருந்தான். உங்கள் அன்பு வேண்டாம்; ஒரு புதிய கல்லீரல் இருந்தால் தேவலை என்றுதான் அவன் சொல்லியிருக்க வேண்டும். ஒரு நாவல் எழுதவேண்டும் என்ற ஆசையை எங்களிடம் பார்த்தபோது பகிர்ந்துகொண்டான்.

நம் வாழ்க்கையில் நடப்பதற்கு ஓரளவாவது நாம்தான் பொறுப்பு என்ற நம்பிக்கை பிரான்சிஸ் கிருபா போன்றவர்களின் முடிவில் ஆட்டம் காண்கிறது. துரதிர்ஷ்டம், தீமை, சிதைவு நோக்கி மூர்க்கமாகத் தள்ளும் விதியைப் போன்ற ஒன்றின் வேகத்தில் தப்பித்தவறி ஒருவன் சிக்கிக்கொண்டுவிட்டால், அவனுக்கு நிகழ்வதற்கு அவன் முற்றிலும் பொறுப்பேற்றுக் கொள்ள முடியுமா?

சொல்ல முடியவில்லை.

உடலில் ஒளியும் இருட்டும் மாறி மாறி நிகழும்போது உயிர் தரிக்கிறது. உடலுக்குள் அந்தகார இருட்டு நிரந்தரமாகச் சூழும்போது மரணம் ஏற்பட்டுவிடுகிறது போல.

நாம் இருக்கிறோம். ஏனென்றால் காரண, காரியங்கள் இருக்கின்றன.

**ஷங்கர்ராமசுப்ரமணியன்**
<shankarashankara@gmail.com>

# திருவள்ளுவரும் காந்தியடிகளும்

## பாவண்ணன்

காந்தியின் கட்டளைக்கல் - அ. இராமசாமி; பக்கம் 77; விலை. ரூ. 95; வெளியீடு: சந்தியா பதிப்பகம், 53ஆவது தெரு, 9ஆவது அவென்யு, சென்னை - 600083; மின்னஞ்சல்: sandhyapathippagam@gmail.com தொலைப்பேசி: +914424896979

கல்வித் தகுதி, செல்வ நிலை, ஆடம்பரம், பழகும் முறை, பேச்சு முறை என ஒருவரை இன்னொருவரிடமிருந்து வேறுபடுத்திக் காட்டும் கூறுகள் எண்ணற்றவை. ஆனால், ஒருவரை ஒட்டுமொத்தமாக மதிப்பிடவேண்டும் என்ற நிலை வரும்போது, இவற்றில் எதையுமே அவரை மதிப்பிடும் அளவுகோலாக எடுத்துக்கொள்ள முடியாது. அவர் இம்மண்ணில் ஆற்றிய செயல்கள் மட்டுமே மதிப்பிட உதவும் அளவுகோலாகக் கருதப்படும். ஒருவருடைய பெருமையையும் சிறுமையையும் அத்தகு செயல்கள் வழியாகவே இந்த உலகம் வரையறுக்கும். ஒவ்வொரு செயலும் ஏதோ ஒருவகையில் உரைகல். இதை மனத்தில் கொண்டே 'எண்ணித் துணிக கருமம்' என்று வள்ளுவர் குறிப்பிடுகிறார். 'பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம் கருமமே கட்டளைக்கல்' என்பது வள்ளுவர் வகுத்திருக்கும் பொதுநெறி. அந்த நெறியே மனித வாழ்க்கையை மதிப்பிட உதவும் அடிப்படை அளவுகோல்.

காந்தியடிகள் தமிழ்நாட்டில் மேற்கொண்ட பயணங்களைப் பற்றிய எல்லாத் தகவல்களையும் பாடுபட்டுத் தேடித் தொகுத்த வரலாற்று ஆய்வாளரான அ. இராமசாமி, தென்னாப்பிரிக்கா வில் காந்தியடிகள் வாழ்வில் நிகழ்ந்த சில நிகழ்ச்சிகளைத் தொகுத்து, அத்தருணங்களில் அவரிடமிருந்து வெளிப்படும் பண்பு நலன்களில் வள்ளுவர் வகுத்தளித்த நெறி எப்படி இரண்டறக் கலந்திருக்கிறது என்பதை ஆய்வுசெய்து வெளிப்படுத்துகிறார்.



'வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும் தீமை இலாத சொலல்' என்று உரைக்கும் திருவள்ளுவர் வாய்மையையே வாழ்வின் அடிப்படை அறமாக முன்வைக்கிறார். சத்தியத்தையே தன் வழியாகக் கொண்டு வாழ்ந்து காட்டியவர் காந்தியடிகள். வள்ளுவர் வகுத்த வாழ்க்கை நெறிகள் காந்தியடிகளின் வாழ்வில் மிக இயல்பான வகையில் வெளிப்படுவதை இருபத்தாறு வெவ்வேறு நிகழ்ச்சிகள் வழியாக எடுத்துக்காட்டி நிறுவுகிறார் ஆய்வாளர் அ. இராமசாமி. ஆய்வுநூல் என்றாலும் ஒரே மூச்சில் படிக்கத்தக்க அளவில் சுவாரசியமான மொழியில் எழுதியிருக்கிறார். நாற்பதாண்டுகளுக்கு முன்னால் எழுதப்பட்ட இக்கட்டுரைகளைத் தேடிப் பதிப்பித்து, வாசகர்களின் கவனத்துக்கு மீண்டும் கொண்டுவந்திருக்கும் சந்தியா பதிப்பகத்தின் முயற்சி பாராட்டுக்குரியது.

தென்னாப்பிரிக்காவுக்கு ஒப்பந்தத் தொழிலாளியாகச் சென்ற பாலசுந்தரத்துக்கு நீதி கிடைக்க காந்தியடிகள் போராடி வென்ற நிகழ்ச்சியையே புத்தகத்தின் முதல் அத்தியாயத்தில் குறிப்பிட்டிருக்கிறார் இராமசாமி. ஒரு தொழிலாளி தான் ஏற்றுக்கொண்ட ஒப்பந்தக் காலம் முழுவதும் தன்னுடைய முதலாளியிடம் உழைக்கவேண்டும். ஒப்பந்தக் காலம் முடிவடைந்ததும் குறிப்பிட்ட தொழிலாளிக்கு அவனுடைய முதலாளி சில சலுகைகளை வழங்கவேண்டும். ஒருவேளை ஒப்பந்தக் காலம் முடிவதற்குள் அத்தொழிலாளி வெளியேறி விட்டால் அவனுக்கு எவ்விதமான சலுகையையும் அளிக்கத் தேவையில்லை. மேலும் அவன் மீது முதலாளி கிரிமினல் வழக்கு தொடர்ந்து தண்டனையையும் வாங்கித் தரமுடியும். இப்படிப்பட்ட விதிகள் நடைமுறையிலிருந்த சூழலில், பாலசுந்தரத்துக்கு எந்தச் சலுகையையும் வழங்காமல் தண்டனை வாங்கித் தர திட்டமிட்ட முதலாளி, பாலசுந்தரம் தானாகவே வேலையைவிட்டு வெளியேறிவிடும் வண்ணம் கடுமையாகத் தாக்கி ரத்தக்காயங்களை உண்டாக்குகிறார்.

அங்கிருந்து தப்பித்து ஓடிவந்து காந்தியடிகளைச் சந்தித்த பாலசுந்தரம் நடந்த நிகழ்ச்சிகளைக் காந்தியடிகளிடம் விவரிக்கிறார். உடனடியாக காந்தியடிகள் அவரை மருத்துவமனைக்கு அழைத்துச் சென்று உரிய மருத்துவம் செய்த பிறகு, அதே மருத்துவரிடம் அதற்குரிய சான்றிதழை வாங்கிக்கொண்டு காவல்துறையிடம் புகார் அளிக்கிறார். முதலாளி, நீதிமன்றத்துக்கு விசாரணைக்காக வரவழைக்கப்படுகிறார். ஒப்பந்தத் தொழிலாளிகள் சட்டத்தில் தொழிலாளி விரும்பினால் வேறொரு முதலாளியின் கீழே வேலை செய்து தன் ஒப்பந்தக்



காலத்தை முடிக்கலாம் என்று குறிப்பிட்டிருக்கும் விதியைப் பயன்படுத்தி வழக்கில் வெற்றி பெறுகிறார் காந்தியடிகள். இன்னொரு வெள்ளைக்கார முதலாளியை அவரே தேடிக் கண்டறிந்து அவரிடம் பாலசுந்தரத்தை ஒப்படைக்கிறார். தண்டனையிலிருந்து தப்பித்த பாலசுந்தரம் நிம்மதியாக வெளியேறுகிறார்.

முன்னும் பின்னும் அறிமுகமில்லாத பாலசுந்தரத்துக்கு நீதி கிடைப்பதற்காகப் போராடி வெற்றி பெற்ற நிகழ்ச்சியின் வழியாக தென்னாப்பிரிக்க இந்தியர்களின் நெருக்கத்தையும் நம்பிக்கையையும் காந்தியடிகள் பெற்றார். மெல்ல மெல்ல அவருக்கு பொதுமக்கள் ஆதரவு பெருகுகிறது.

இந்நிகழ்ச்சியை சுருக்கமாக விவரிக்கும் இராமசாமி, கட்டுரையின் முடிவில் 'கருமம் செய் ஒருவன் கைதூவேன் என்னும் பெருமையின் பீடுடையது இல்' என்னும் குறள்நெறிக்கு இசைவாக மிக இயல்பாக அமைந்திருக்கும் காந்தியடிகளின் வாழ்க்கையைப் புரிந்துகொள்ள உதவி செய்கிறார்.

ஜோகன்ஸ்பர்கில் வழக்கறிஞராக பணியாற்றி வரும்போதே, காந்தியடிகள் மனத்தில் ஓர் ஆசிரமம் அமைக்கும் கனவு இருந்தது. அதுவரை உலகம் அறிந்ததெல்லாம் பக்தி, ஞான, யோக ஆசிரமங்கள் மட்டுமே. காந்தியடிகள் கர்மயோகத்தை வழிமுறையாகக் கொண்ட ஆசிரமத்தை உத்தேசித்திருந் தார். அனைவரும் உழைத்து, அனைவரும் இணைந்து, அனைவரும் பகுத்துண்டு வாழும் ஆசிரமம். அதற்காக டர்பனிலிருந்து பதினைந்து மைல் தொலைவி லிருந்த இடத்தில் நூறு ஏக்கர் நிலத்தை ஆயிரம் பவுன் கொடுத்து வாங்கி போனிக்ஸ் பண்ணையை நிறுவினார். அவருடைய கொள்கைகளில் நம்பிக்கை யுடைய பல நண்பர்கள் அங்கே குடியேறினர். ஒவ்வொரு குடும்பத்துக்கும் மூன்று ஏக்கர் நிலம் பிரித்தளிக்கப்பட்டது. விவசாயத்திலிருந்து வீட்டுப் பராமரிப்பு வரை எல்லா வேலைகளையும் அவரவர்களே மேற்கொண்டனர். இந்தியன் ஒப்பி னியன் அச்சகத்தையும் அந்தப் பண்ணைக்கே மாற்றினார் காந்தியடிகள்.

ஒருமுறை ஜோகன்ஸ்பர்கிலிருந்து டர்பனுக்குச் செல்ல அவர் ரயிலில் பயணம் செய்யத் தொடங்கியபோது, ரயில்நிலையம் வரைக்கும் அவரோடு வந்திருந்த ஒரு நண்பர் தன் கையிலிருந்த ஒரு புத்தகத்தைக் காந்தியடிகளிடம் கொடுத்துவிட்டுச் சென்றார். அப்புத்தகத்தின் பெயர் 'UNTO THE LAST'. ரஸ்கின் என்னும் எழுத்தாளர் எழுதியது. பயணநேரத்தில் அப்புத்தகத்தைப் படிக்கத் தொடங்கினார் காந்தியடிகள். தன் மனத்தில் இருந்த சில கேள்விகளுக்குத் தெளிவான விளக்கங்களை அப்புத்தகத்தில் அவர் கண்டடைந்தார். அப்புத்தகம் வலியுறுத்திய மூன்று முக்கியமான உண்மைகள் அவர் நெஞ்சில் ஆழமாகப் பதிந்தன.

*1) உன் நன்மை உலகின் நன்மையில் அடங்கி யிருக்கிறது. 2) தம் தொழிலிலிருந்து தம் வாழ்க்கைக்குத் தேவையான ஊதியத்தைப் பெற ஒவ்வொருவருக்கும் உரிமை உண்டு. தொழிலில் மேல் கீழ் என்னும் பேதமில்லை. 3) உடலால் உழைத்து வாழ்பவரின் வாழ்க்கையே வாழத்தக்க உயர்ந்த வாழ்க்கை.*

வாழ்நாள் முழுதும் இந்த உண்மைகளை நடைமுறைப்படுத்தும் முயற்சியில் தொடர்ந்து ஈடுபட்டு வந்தார் காந்தியடிகள். இம்மூன்று உண்மைகளுமே வள்ளுவர் வெவ்வேறு அதிகாரங்களில் சுட்டிக்காட்டும் உண்மைகளே. ஒப்புரவு என்னும் அதிகாரத்தில் உள்ள 'ஒத்தது அறிவான் உயிர்வாழ்வான் மற்றையான் செத்தாருள் வைக்கப்படும்' என்னும் குறளும் பெருமை என்னும் அதிகாரத்தில் 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமையான்' என்னும் குறளும் உழவு என்னும் அதிகாரத்தில் 'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம் தொழுதுண்டு பின்செல்பவர்' என்னும் குறளும் இடம்பெற்றிருக்கின்றன.

ரஸ்கின் புத்தகத்தின் முக்கியத்துவம் கருதி, காந்தியடிகளே அப்புத்தகத்தை குஜராத்தி மொழியில் 'சர்வோதயம்' என்னும் பெயரில் மொழிபெயர்த்தார். அந்நெறிகள் மீது ஆழ்ந்த பிடிப்புள்ளவராகவும் வாழ்ந்தார் காந்தியடிகள்.

அந்தக் காலத்தில் டிரான்ஸ்வாலுக்குள் நுழைவதற்கு இந்தியர்கள் அனுமதிச்சீட்டு பெறவேண்டும் என்னும் விதி நடைமுறையில் இருந்தது. அனுமதிச்சீட்டை வழங்கும் பொறுப்பிலிருந்த அதிகாரிகள் பேராசை மிக்கவர்களாக இருந்தனர்.

(தொடர்ச்சி 13ஆம் பக்கம்)

(10ஆம் பக்கம் தொடர்ச்சி)




ஒவ்வொரு அனுமதிச் சீட்டுக்கும் லஞ்சம் கேட்டு பெற்றுக்கொண்டனர். அனுமதிச் சீட்டு வழங்குவது பணமீட்டும் வழியாக மாறிவிட்டது. மக்கள் அக்கொடுமைச் செயலைப் பற்றிய செய்திகளைக் காந்தியடிகளின் கவனத்துக்குக் கொண்டுவந்தனர். உடனே, தனிப்பட்ட விசாரணைகள் வழியாக தகவல்களைத் திரட்டிக்கொண்ட காந்தியடிகள் தலைமை அதிகாரியைச் சந்தித்து புகார் கொடுத்தார். லஞ்சம் பெற்ற இரு அதிகாரிகளையும் நீதிமன்றம் அழைத்து விசாரணை செய்தது. குற்றம்சாட்டப்பட்ட அதிகாரிகளும் வெள்ளைக்காரர்கள், விசாரிக்கும் நீதிபதியும் வெள்ளைக்காரர் என்பதால் விடுதலை வழங்கப்பட்டுவிட்டது. ஆனால், வழக்கு விசாரணை பற்றிய செய்திகளைத் தொடர்ச்சியாகக் கவனித்து வந்த டிரான்ஸ்வால் அரசாங்கம் அதிரடியாக அந்த அதிகாரிகளை வேலை நீக்கம் செய்து தண்டித்தது. நீதிமன்றத்தில் கிட்டாத நீதியைக் காந்தியடிகள் அரசிடமிருந்து பெற்றார்.

வேலையிலிருந்து நீக்கப்பட்ட அதிகாரிகள் ஜோகன்ஸ்பர்க் நகரசபைக்கு வேலை தேடி விண்ணப்பித்தனர். வேலை கிடைத்துவிடும் என்கிற நம்பிக்கையும் அவர்களுக்கு இருந்தது. ஒருவேளை காந்தியடிகள் அங்கேயும் பழைய செய்தியைப் பரப்பி தம் பெயர்களுக்குக் களங்கம் நேரும்படி செய்துவிடுவாரோ என நினைத்து அஞ்சினர். அதனால், இரு தரப்பினருக்கும் பொதுவான நண்பர் ஒருவர் வழியாகக் காந்தியடிகளுக்கு தம் கோரிக்கையை செய்தியாக அனுப்பிவைத்தனர். காந்தியடிகளும் அதை ஏற்றுக்கொண்டார். அந்த அதிகாரிகளுக்கும் வேலை கிடைத்தது. அவர்களுக்கும் 'இந்த மனிதர் நல்லவர், தக்க சமயத்தில் குற்றத்தை மன்னித்து உதவக்கூடியவர்' என்ற எண்ணம் ஏற்பட்டது. தண்டனைக்கும் மன்னிப்புக்கும் இடையிலான எல்லைக்கோடு மிகவும் கடினமானது. மனிதன் வேறு, அவன் செயல் வேறு என்று பிரித்துப் பார்க்க அவரால் எப்போதும் முடிந்தது.

தண்டனை அளவுக்கு மீறிச் சென்றுவிடக்கூடாது என்பதை வலியுறுத்தும் 'தக்காங்கு நாடி தலைச்செல்லா வண்ணத்தால் ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து' என்னும் திருக்குறளின் நெறியை இராமசாமி இப்பகுதியில் பொருத்தமாக இணைத்துக்காட்டுகிறார்.

காந்தியடிகளின் வாழ்வில் மன்னிக்கும் தருணங்கள் ஏராளமாக உள்ளன. தென்னாப்பிரிக்காவில் வாழும் இந்தியர்கள் அனைவரும் கைரேகை வைத்து பதிவு செய்துகொள்ளவேண்டும் என்றொரு கறுப்புச் சட்டம் தொடக்கத்தில் இருந்தது. காந்தியடிகள் இச்சட்டத்தை எதிர்த்தார். ஆனால், காந்தியடிகளைத் தவறாகப் புரிந்துகொண்ட மீர் ஆலம் என்பவர், 'இந்தியர்களைக் காட்டிக் கொடுத்தவர்' என்று காந்தியடிகளைத் தாக்கிவிட்டு சிறைத்தண்டனை பெற்றார்.

அவர் விடுதலை பெற்ற காலத்தில் ஒரு மசூதிக்கு வெளியே மைதானமொன்றில் இந்தியர்களின் கூட்டமொன்றைக் கூட்டியிருந்தார் காந்தியடிகள். கறுப்புச் சட்டத்தைத் திரும்பப் பெறமுடியாது என ஸ்மட்ஸ் திட்டவட்டமாகக் கூறிவிட்டதால் அனைவரும் தம் பதிவுச் சான்றுகளை மைதானத்தில் வைக்கப்பட்டிருந்த அண்டாவில் போட்டு தீயிட்டுக் கொளுத்தினர். அக்காட்சியை நேருக்கு நேர் பார்த்த மீர் ஆலம், காந்தியடிகளை நெருங்கி அவருடைய கைகளைப் பற்றிக்கொண்டு மன்னிக்குமாறு கண்ணீர் பெருக கேட்டுக்கொண்டார். பிறகு அவர் முன்னிலையிலேயே தன் பதிவுச் சான்றிதழ்களை தீயிட்டுக் கொளுத்தினார். காந்தியடிகள் அவரை அணைத்துக்கொண்டு புன்னகைத்தார்.

இந்நிகழ்ச்சியை விவரிக்கும் இராமசாமி 'மிகுதியான மிக்கவை செய்தாரை தாம்தம் தகுதியான வென்றுவிடல்' என்னும் குறள் வகுத்திருக்கும் நெறியை பொருத்தமான விதத்தில் சுட்டிக்காட்டுகிறார்.

இப்படி காந்தியடிகளின் தென்னாப்பிரிக்க வாழ்விலிருந்து இருபத்தாறு நிகழ்ச்சிகளைத் தேர்ந்தெடுத்து, அவற்றில் வெளிப்படும் காந்தியடிகளின் உயர்ந்த பண்புகளில் குறள் நெறி சுடர்விடுவதை அடையாளப்படுத்துகிறார் இராமசாமி. குறள் நெறி வகுத்திருக்கும் அடிப்படை அறமும் காந்தியடிகள் தம் இறுதி மூச்சு வரைக்கும் பேணிய அறமும் ஒன்றே என தம் மதிப்பீட்டின் வழியாக உணர்த்துகிறார்.

பாவண்ணன் <paavannan@hotmail.com>

# டி. கண்ணன் கவிதைகள்

**ஓவியம்: நடேஷ்**

1

மருத்துவமனையிலிருந்து
வீட்டிற்குள் அம்மா கிடத்தப்பட்டாள்
அவரவர் நினைவுகளுக்கேற்ப அம்மா
பல வயதுகளில்
ஐஸ் பெட்டிக்குள் உலவத் தொடங்கினாள்
கூட்டம் குறையக் குறைய அம்மாவின்
வயது மிருதுவாய் ஏறிக் கொண்டிருந்தது
ஐஸ் பெட்டியிலிருந்து வெளியே வந்தது உடல்
நெற்றியில் ஸ்ரீ சூர்ணம் இடப்பட்டது
உரிய வயதை மீட்டாள் அம்மா
புறப்பட்டது பாடை
வெறுமையில் விழுந்தது பள்ளம்

2.

கலியுக பீஷ்மனை நெருங்கும் வயது
இன்றும் கத்திக் கப்பல் செய்யத் தெரியவில்லை
கண்டு பெய்த மழைகளில்
ஆழம் அதிகமில்லை
சாரல் ஒரு மழைக்குஞ்சு
நிழல்கள்
பாதுகாப்புடன்தான்
உலவுகின்றன

3

ஈரம் தோன்றி (ஊறி)
காய்ந்து மறைந்த தருணத்தில்
துயர நினைவொன்று எழுகிறது
அவ்வமயம்...
நீர்த்திவலைகள் மோதும்
நதியினின்றும் விலகிய
அந்தியொன்று தெரு நுழைகிறது
மனதின் நனவிலி மண்டலங்களில்
பறந்து மறைந்து போனது அந்நினைவு
அடிவானத்தில் மீந்தன பறவைகள்
காத்திருக்கிறது கனவு

4

எதிர்பாரா நினைவின் மதிய மொன்றின்
நகரும் நிழலில்
தயிரு தயிரு என்று
தெருவில் அவள்
அழைத்தபடி செல்கிறாள்
எதனினும் இனிது அவள் குரல் (இளம் வெய்யில்)
அழைத்தேன்
இரண்டு குவளைத் தயிர்



ஒரு குவளை குரல்
வாங்கினேன்
நினைவில் புளிக்கவில்லை
இன்றும் எது?

5

அழுது சாதித்துக் கொண்டிருந்தது
அந்தக் குழந்தை
அழுகை அதன் உறுப்பாம்
மற்ற உறுப்புக்களை விடவும்
வேகமாய் வளர்ந்து கொண்டிருந்தது
மற்ற உறுப்புக்கள் சீராய் வளர்ந்து
கொண்டிருந்தபோது
தானே உள் மறைந்தது அது
கார்முகிற் செண்டு வானில்
தோன்றி வளர்ந்து
அருகாமை ஆலமர அடிவாரத்தில்
மழையென பெய்து மறைந்தது
முற்றிலும் மறைந்து விட்டதா அது?

6. புனைவின் பாடல்

இந்த பாடலை*
உங்கள் அறிவு கொண்டு அணுகாதீர்கள்
உணர்வு கொண்டு அணுகுங்கள்
அப்போது ஒரு அறிவு பிறக்கும்
முந்தைய அறிவையும்
கிடைத்த அறிவையும்
நளினமாய் மோத விடுங்கள்
அப்போது ஒரு மலர் பூக்கும்
பூவை விரலால் எடுத்து முகருங்கள்
பாடல் உங்களுடன் தங்கிவிடும்

*அலி பிரதர்ஸ் ராகம்: பூர்வி

**"டி. கண்ணன்"** <krishnaswamy164@gmail.com>

# வாதனைகள் சில சோதனைகள்

## பொ. கருணாகரமூர்த்தி ஓவியம்: வி.பி. வாசுகன்

"ஹலோ வணக்கம்" / "வணக்கம்...", "நலமாயிருக்கீங்களா" - இந்த மாதிரி ஒரு இயல்பான உரையாடலாகத்தான் முகநூலில் எமது நட்பு ஆரம்பித்தது. பின்னர் ஒரு நாள்...

"என்னை உங்களுக்குத் தெரியாது... ஆனால், உங்களை எனக்குத் தெரியும்" என்றாள்; எனக்குத் 'திக்' கென்றது.

"உங்களின்ர 'பச்சைத் தேவதையின் கொலுசு' படித்தனான். உங்க அனுபவங்களைப் பார்க்க அந்தக் கதை வெறும் புனைவு மாதிரித் தெரியேல்லை."

"அப்படியா... அதொரு இலக்கியப் பத்திரிகையில் வந்த கதையாச்சே, எப்படி உங்களுக்கு வாசிக்கக் கிடைச்சுது"

"அப்ப நாங்கள் இலக்கியப் பத்திரிகைகள் படிக்கப்படாது எங்கிறியளோ?"

"நான் அந்த அர்த்தத்தில சொல்லேல்லை, அவை லேசில எல்லா இடத்திலயும் கிடைக்காது. எனக்கு இன்னும் உங்கள் இலக்கிய ரசனைகள் டேஸ்டுகள் தெரியாதல்லவா... நீங்களும் சேலத்தில இருப்பதாய்ச் சொல்லிறியள், இலங்கைத் தமிழ் பேசிறியள் எல்லாம் அதிசயமா இருக்கிறதால கேட்டன்..."



ஆனானப்பட்ட சென்னையில கணையாழியும் சுபமங்களாவும் எந்தக் கடையில் கிடைக்குமென்று எவருக்கும் தெரியவில்லை. அதை வாங்குவதற்கு ஒரு வாரமா ஒரு சித்திரை வெய்யிலில் அலைந்த அனுபவம் எனக்குண்டு. 'டீக்'காய் உடுத்திக் கழுத்துப்பட்டி சகிதம் அலுவலகத்துக்குப் போய்க்கொண்டிருந்த ஒரு கனவானை நிறுத்தி விசாரித்தேன்.

"அண்ணே, சுபமங்களா எங்கே கிடைக்கும்."

"ஆப்படீன்னா என்ன?"

"அதுவொரு தமிழ்ச் சஞ்சிகை."

அவரது வாயில் 'சுபமங்களா' நுழையவில்லை.

"அப்பிடீன்னு சஞ்சிகை எதுவும் கிடையாது, ஒருவேளை மலையாளமாயிருக்கும்."

கடைசியாக ஆனந்தவிகடனுக்குப் போன் பண்ணித்தான் விபரம் அறிந்தேன்.

முகநூல் நண்பியின் உரையாடல் தொடர்ந்தது.

"அண்ணே, இப்ப இந்த போன்லயிருந்து நான் கனநேரம் கதைக்கேலாது. நான் பிறகொரு சமயம் உங்களோட கதைக்கிறன், எனக்கு உங்களோட 'ஷேர்' பண்ண. நிறைய இருக்கு... Until then bye bye Wish you a Good day." தொடர்பு துண்டிக்கப்பட்டது.

அவளுக்குச் சரளமாக ஆங்கிலமும் வரும்போலத் தெரிந்தது.

பிறகொருநாள் உள்பெட்டியில், "அண்ணே உங்களிடம் நான் ஒரு 10 நிமிஷம் பேசணும்; இப்போ நான் உங்ககூடப் பேசலாமா" என்று கேட்டுவிட்டு மெஸெஞ்சரில் அழைத்தாள்.

"அண்ணே... நான் ஒரு பெரிய தப்பைச் செய்துபோட்டுக் கிடந்து பரிதவிக்கிறன், நீங்கள்தான் என்னைக் கரையேற்றி விடவேண்டும்."

"தப்பிலயிருந்து எப்படிக் கரையேற்றிறது, அப்படீன்னா எத்தனையோ கொலைக் குற்றவாளிகள்..."

நான் முடிக்க முதலே தொலைக்காட்சி நெறியாளர் மாதிரி இடையிட்டாள். "தப்பிலயிருந்து கரையேற முடியாதுன்னு தெரியும்; சாகும்வரையில நாந்தான் அதை அனுபவிக்கணும். புரியுதண்ணா... அந்தத் தப்பால நான் படும் சஞ்சலங்களிலிருந்து எனக்குக்கொரு 'றிலீஃபோ'... விடுதலையோ நீங்கள்தான் பெற்றுத்தரவேணும். என்னைப்போல வேற ஆக்களும்



இதுமாதிரித் தவறுகள் செஞ்சிருக்கிறாங்கதான், ஆனால், என்னுடைய தப்பே இவ்ளோ பெரிய வாதனையா என் தலையில் விடியுமென்று நான் எதிர்பார்க்கேல்லை."

அவளை யாராவது கொத்தடிமையாக வைத்துப் படுத்துகிறார்களோ; அவளது வார்த்தைகள் சிக்கல் கொள்ளக்கொள்ள எனக்குள்ளும் கிலேசம் பரவத் தொடங்கிற்று.

"நான் நீர் நினைக்கிறா மாதிரி இரக்ஷகனோ ஆபத்பாந்தவனோ எதுவுங் கிடையாது... எனக்குச் சொல்லக்கூடிய வகையிலான தப்பென்றால் அதைச் சொல்லும் நான் இப்ப U-Bahn என்கிற ஒரு Tunnel டிரெயினில் போய்க் கொண்டிருக்கிறன். நான் தமிழ்ல சளசளக்கச் சனமெல்லாம் என்னை வேடிக்கை பார்க்குது, இன்னும் இரண்டு நிமிஷத்தில நான் இறங்கவும் வேணும்டா. உம்மிட்ட மின்னஞ் சல் முகவரியும் இருக்குத்தானே, போன்ல சொல்லக் கஷ்டமாக இருந்தால் நீர் எனக்குச் சொல்ல நினைக்கிற எல்லாத்தையும் எழுதிவிடும். என் சின்ன மூளைக்கு ஏதாகிலும் தீர்வு பிடிபட்டால் என்ன செய்யலாங்கிற யோசனையை நானும் எழுதிறன். சரியா..."

"உங்கள் கதைகளின் பிரகாரம் நீங்கள் கஷ்டத்தில இருக்கிறவங்களுக்கு வலிந்து உதவக்கூடிய மனசுள்ளவரென்டு கண்டதாலதான் உங்களோட என்னுடைய பிரச்சினையைப் பகிருறேன். என்னால் தமிழில நிறைய எழுதேலாது, போன் கதைக்கிறதுதான் வசதி, பிறகு எடுக்கிறன்... பை பை." தொடர்பு துண்டிக்கப்பட்டது.

அன்றிரவே திரும்பவும் அழைத்தாள்.

"கீர்த்தனா தெரியும் கீர்த்திகா தெரியும், கீர்த்தன்யாங்கிற உம்மபெயர் வித்தியாசமாயிருக்கு... அதை நான் என்னுடைய அடுத்த கதாநாயகிக்கு வைக்கவா..."

"என் முழுக்கதையும் கேட்டிங்கன்னா உங்களுக்கு ஒரு பெரிய நாவலுக்கான ப்ளொட்டே கிடைக்கும் சேர்..."

"நீர் 'சேர் சேர்' என்று என்னோடை கதைக்கிறது எனக்கு 'ஒட்'டாயிருக்கு... Weird Mam, அதையும் நீர் மாத்தணும்."

"அப்போ நான் உங்களை இஞ்சத்தைய ஆக்கள் ஸொல்ற மாதிரி 'மாமா'ன்னு ஸொல்லட்டே."

"ஒரு சின்னப் பொண்ணு மாமான்னு கூப்பிட்டா யாருக்குத்தான் கசக்கும்... ஆனா, எனக்கு 40 வயசாக்கும்... அதையும் மனசில வைச்சிண்டு உமக்கு எப்பிடித் தோணுதோ அப்பிடிச்சொல்லும்."

"தாங்க்ஸ்...மாமா."

"நாங்கள் மாமா.. 2006இல முள்ளிவாய்க்கால் சம்பவங்களுக்கு முதலே இந்தியாவுக்கு அகதிகளாக வந்து, இராமநாதபுரம் மாவட்டம் - மண்டபம் முகாமில ஒருமாதம் வரையில் தொங்கிக் கிடந்து இழுபட்டு, பின் திருச்சி மாவட்டம் - கொட்டப்பட்டு முகாமுக்கு வந்துசேர்ந்தோம். அப்போ எனக்கு 12 வயதுதான். புறப்பட்டதிலிருந்து இந்தியாவுக்கு அகதிகளாக வந்ததையிட்டு வருத்தப்படாத நாளேயில்லை.

மொத்தக் குடும்பமும் ஒரே போட்டில போகப்படாதென்று அப்பா அடுத்தநாள் வேறொரு போட்டில வந்ததால அவரை இன்னொரு முகாமுக்கு அனுப்பிட்டாங்கள். பிறகு வைகோ, ராமதாஸ் வரையில போய்த்தான் எங்களை ஒரே முகாமில் விட்டாங்கள்.

அப்போ நான் ஏழாவது படிச்சுக்கொண்டிருந்தன், தமிழில படிச்ச எனக்கு இவங்கட தமிழ் பிடிபடவே நாளாச்சு... அதால இவங்கள் என்னை ஆறாவதிலதான் விட்டாங்கள். இழுத்துப் பறிச்சு ஒருவாறு பத்தாவது வந்தனா..."

"இப்போ சுத்தமான தமிழகத்துப் பெண்ணாயாயிட்டாப்பல..."

"நீள மயிரும் வெள்ளைத் தோலுமாய் கொஞ்சூண்டு அம்சமா... இவங்க பாஷையில் 'கும்'முனு இருந்தனா, முகாமுக்கு வெளியிலும் உள்ளயுமாகப் பெடியங்கள் என்னையே சுத்திச்சுத்தி வந்துகொண்டிருந்தாங்கள். சாரமதின்னு ஒரு டான்ஸ் டீச்சர் முகாமில இருக்கிற புள்ளங்களுக்கு ஃப்ரீயா டான்ஸ் சொல்லிக் கொடுத்தாங்க."

"என்ன பரதநாட்டியமா...?"

"பின்னே என்ன ஹிப் ஹாப் டான்ஸா... படுத்தாதீங்க மாமா." சிணுங்கினாள்.

"சரி... மேல சொல்லும்."

"அவரோட வகுப்புக்குப் போனா, போகையில நாலுபேர் வரெக்க ஆறுபேர் எனக்கு எஸ்கோர்ட் மாதிரித் தொடரத் தொடங்கிட்டாங்க... இதைப் பார்த்த அம்மா இந்த ஆட்டமும் கூத்தும் நமக்கு வாணாம்... கலாபரிபாலனங்களெல்லாம் நமக்கானதல்ல, அது ஒத்துவராது.. பிழைக்கற வழியைப் பார்ப்போம்னு என்னையக் கிளாஸுக்கே போகவிடாம நிறுத்திட்டாங்க. என் காலேஜிலேயே மேல் வகுப்பில் படித்துக்கொண்டிருந்த ஒருத்தன்தான், 'நீ இல்லேன்னா செத்துப்புடுவேன்'னு விடாமல் தொல்லை தந்திட்டிருந்தான்.

'உனக்குப் பின்னாலதான் என்னுடைய வாழ்க்கையும் உலகமும் விரியுது, நீ இல்லாத நான் வெறும் பூஜ்ஜியம்' என்றெல்லாம் கஞ்சா தடவின வார்த்தைகளாக எடுத்து விட்டான், அவனது மயக்கு மொழிகளில மயங்கி நான் அவன் விரிச்ச காதல்வலையில மெல்லமெல்ல விழுந்திட்டேன். சாப்பாட்டிலகூடக் கவனமில்லாமல்... பாட்டும் குதிப்புமாய் என்னுடைய சாங்கங்களைக் கவனிச்ச அம்மாதான் முதல்ல என்னையெக் கேட்டா, 'ஏன்டி நீ எவனையாவது'லவ்' பண்றியா'ன்னு. அம்மாவும் அப்பாவைக் காதலிச்சுத்தான் கட்டினவ. கட்டினதோ ஓடினதோ... பாம்பின் காலைப் பாம்பறிஞ்சிட்டுது. அப்பா ஒரு தலித்து, அவர்களது ஒரு கலப்புத் திருமணம்.

அது உடுமலைப்பேட்டையில் சங்கரின் ஆணவக்கொலை விழுந்த டைம். எனக்கேற்பட்ட பயத்தில் என்னை வளைய வந்துகொண்டிருந்தவனுக்குச் சொன்னேன்: 'நான் ஒரு கலப்புத் திருமணத்தில பிறந்த பொண்ணு. உங்க குடும்பத்துக்கு விஷயம் தெரிய வந்தால் அவங்க என்னையப் போட்டுத்தள்ளிவிடச் சாத்தியம். அதால இந்தக் காதல் கருமாதி ஒன்றும் வேண்டாம். என்னெய விட்டுடு'ன்னு சொன்னேன்.

'அவனோ ஹே... லூஸு, இதெல்லாம் பூவுன்னு ஊதிவிடுற சமாச்சாரம்டா, உலகம் எவ்ளோ மாறிடிச்சு. உங்க முகாமுக்குள்ளாறதான் இன்னும் எதுவும் மாறல்லைப்போல இருக்கு. நாங்கூட கலப்புத் திருமணத்தில் பிறந்த பையன்தான். எங்கம்மா பிராமின், அப்பா நாடார், இப்ப என்னாங்கறே' என்றான். நம்பிட்டேன். பின்னாலதான் தெரிஞ்சுது... அவனுக்குத் தன் ஜாதியே சரியாய்த் தெரியலை. அவன் நிஜத்தில முக்குலத்தோரோ என்னவோ, அது எனக்குப் புரியாதுன்னாக்கும் வாய்க்கு வந்தபடி 'நாடார்' என்றிட்டிருக்கிறான். கூடவே தங்கள் குடும்பம் ஒரு மார்க்ஸிய, பெரியாரியக் கொள்கைகளைப் பின்பற்றும் ஒரு முற்போக்குக் குடும்பமென்றும் அடித்துச் சொன்னான்.

'நான் சீதனம் போன்ற விஷயங்களில் எல்லாம் மிக மிக முற்போக்குவாதி. உன்னை ஒரு குண்டுமணி நகைகூடக் கொண்டுவா' என்று கேட்கமாட்டேன் என்று என் கையைப் பிடித்து அடித்தான். 'அகதி முகாம் வாழ்க்கையில அரிசி ரேஷனுக்கே அக்கப்போர்... உனக்குச் நகையெல்லாம் சீர் செய்வாங்களாக்கும்' என்றேன்.

எவன்னாலும் அம்மா ஆரம்பத்திலிருந்தே 'இதெல்லாம் வேணாம்டி' என்று மறுத்துக் கொண்டேதான் இருந்தா. போருக்குப் பிறகு நாடு சுமுகமான நிலைக்குத் திரும்பிடும் போலயிருக்கு,

இந்த ஆண்டிலேயே நாம் ஊருக்குத் திரும்பிடுவம். ஒரு இந்தியத் தமிழனை நீ கட்டினால், நீ இங்கே நானும் அக்காளவையும் அங்கேயென்று பிறகெல்லாம் இடியப்பச் சிக்கலாயிடும் புரிஞ்சுக்கோ'வென்று ஒவ்வொரு இரவும் எனக்கு ஓதிட்டே இருந்தா.

எங்க அகதிக முகாம்ல குடும்பத்தில் பெரியவர்களுக்கு மாசம் 12 கிலோ அரிசியும் தலைக்கு 400 ரூபா பணமும் கிடைச்சுது. அதைக்கொண்டு ரேஷன் சாமன்கள்தான் வாங்கலாம்.

அப்பாவும் ஒரு முனகலுமில்லாமல், ஒப்பந்த அடிப்படையில வீடுகளுக்குப் போய் சுவர்களுக்கு வெள்ளை / பெயின்ட் / டிஸ்டெம்பர்கள் அடிக்கிற வேலைகள் பண்ணிக் கொண்டிருந்த இளைஞர்களுடன் கூடப்போய் வந்துகொண்டிருந்தார். மூவாயிரமோ சிலமாதங்களில் ஐயாயிரங்கூடச் சம்பாதித்தார். வாழ்க்கை பசி பட்டினி இல்லாமத்தான் நகர்ந்து கொண்டிருந்தது. அப்பா ஊரில கள்ளுமட்டும் குடிச்சுக் கொண்டிருந்தார். இங்கே அதுகூட இல்லாமல் தலைவலி காய்ச்சலே தெரியாமல் நல்ல சுகதேகியாகவிருந்த அப்பாவெங்கிற ஆறடி உயர ஆஜானுபாகுவான மனுஷன் எங்கள் காதல் கருமாதி எதையும் தெரிஞ்சுகொள்ளாமலே ஒருநாள் வந்த மாரடைப்பில அடங்கிப்போனார். அப்பா இறந்ததும் அகதிகளுக்கான நிவாரண உதவிகளுடன் ஒழுக்கு வீட்டுக்குள்ள வாழுறதே வாதனையாய்ப் போச்சு.

அம்மாவுக்கொரு தங்கையும் தம்பியும் கனடாவில இருக்கினம். அம்மா அவர்களுக்குப் போன் எடுத்து 'கீர்த்தன்யா யாரோடையோ ஓடப்போறன் என்டு நிற்கிறாள்டா...' என்று போட்டுவைத்தார். அப்பா தலித்தென்ற காரணத்தால் அவருடைய இறுதிச் சடங்குகளுக்களில்கூட வந்து எட்டிப்பாராத மாமா தினமும்போன் எடுத்து என் காதுகளில் தொன்கணக்கில் அட்வைஸுகளாக இறக்கினார். சாத்தியமோ தெரியாது, 'எங்க சொல்வழி கேட்டியென்றால் நான் செல்லத்தைக் கனடாவுக்குக் கூப்பிடுவன்' என்றெல்லாம் சொன்னார்.

நாங்கள் எழுதிக் கொடுத்திட்டுச் சிலோனுக்கே போகப்போவதாக அவனிடம் சொன்னேன், ஓவென்று அழுதான்... எனக்கு சின்ன வயதிலிருந்தே ஒரு அனாதைப் பெண்ணையோ, அகதிப் பெண்ணையோதான் கல்யாணம் பண்ணணும் என்றொரு இலட்சியம் இருக்குது. அதுக்காகவேனும் என்னை நீ கட்டிக்கமாட்டியாவென்று என் காலைக் கட்டினான். 'என்னையவிட எத்தனையோ அழகான அகதிப் பெண்கள் எங்க முகாமிலயும் இன்னுமுள்ள நூறு முகாங்களிலும் இருக்கிறாங்க... அவாளுகளில ஒருத்தியைப் பார்த்துக்கட்டிக்க ராஜா... என்னைய விட்டிடு' என்றேன் அவனுக்கு."

"உனக்குத் தெரியாதுடி 'கீர்த்தன்யா'... உன்னைப் பார்த்தவொரு கணத்திலயிருந்து உன்னை மனத்துள்ள மானசீகமாக என் மனைவியாய் வரிச்சிட்டு உங்கூட என்னுள்ளே வாழ்ந்து கொண்டிருக்கேன்டி, ஸ்ரீலங்காவில பிறந்த உன்னை எனக்கத்தான் தேவதைகள் இங்கே அனுப்பியிருக்கென்று நம்புறேண்டி... அப்பிடி என்னைய விட்டுப்போயிடாதடி, நீ போயிட்டால் எனக்கும் இந்த வாழ்க்கை சூனியமாகிவிடும்டி, நடைப்பிணமாயிடுவேன், அப்புறம் எனக்கும் சாகிறதைத் தவிர வேறு மார்க்கமிராது" என்றெல்லாம் கெஞ்சினான்.

அன்றைக்குத்தான் அவன் என்னையக்'கீர்த்தன்யா' என்று பெயர்சொல்லி அழைத்தது. எனக்குள்ளே ஒரு மின்சாரம் பாய்ந்த மாதிரி... அக்கணத்திலிருந்து என் இதயமும் வேறொரு மாதிரியான சந்தத்தோட துடிக்க ஆரம்பிச்சுது. அவந்தான் என்கரம் பற்றப் பிறந்த ராஜகுமாரனோ என்றெல்லாம் என்மனம் தனக்குத்தானே கற்பிக்க ஆரம்பிச்சது மாமா... பிறகெல்லாம் தூக்கம் வராத இரவுகள்தான். என்னையறியாமலே கண்களால் வழிந்து தலையண நனைந்துவிடும். 'ஏன்தான் இப்படி ஈழத் தமிழரில குறிப்பாய் ஏதிலிகள் மேல பிரியமாயிருக்கிற, படித்த, சாதி சம்பிரதாயங்களைக் கடந்த, முற்போக்கான, ஒரு கனவானைப்போல பண்பான, என்னையொரு பூவைபோலத் தாங்கச் சித்தமாயிருக்கிற, என்மேல் பித்தாக இருக்கிற ஒரு இளைஞனை எதுக்காக வெறுக்கிறார்'களென என்னைப் பெற்றவா, சுற்றத்தின் மேலயும் எனக்கு எரிச்சலுங் கோபமுமாய் வந்தது.

என்னைப் பெற்ற அம்மா, சுற்றங்கள், அறிஞ்சவை தெரிஞ்சவை எல்லாற்றை கண்ணிலும் மண்ணைத் தூவி விட்டிட்டு இவனோட சென்னைக்கு எடுபட்டேன். சினிமாவில ஓடுறவைக்கு நடக்கிறமாதிரி ஒரு ஆறுமாதம் வரையில எங்கள் இருவரையும் அவனுடைய மாமன்காரன் ஒருத்தர்தான் தன்வீட்டில தங்கவைச்சு ஆதரிச்சார். அவருக்குத் தொடர்ந்தும் சுமையாக இருக்கப்படாதென்று இவனும் நானும் தொடர்ந்து வேலை தேடியதில் ஒரு குடும்பத்துக்குச் சொந்தமான ஒரு பிறெஸில இவனுக்கு மட்டும் வேலை கிடைக்கவும் நுங்கம்பாக்கத்தில பிரசாந் ஹொஸ்பிட்டலுக்குப் பின்பக்கமா, கூவத்தின் நாத்தத்தோட ஒன்றரை அறையில இருந்த ஒரு ஒட்டுக்குடித்தன வீட்டில் குடியேறினோம் கொஞ்சநாள்ல எனக்கும் ஒரு கின்டர்கார்டனில வேலை கிடைச்சுது, ஒரு மாசத்தில என்னுடைய 'தமிழ் சரியில்லை'யென்று நிற்பாட்டிட்டாங்கள். மூன்று வருஷ சென்னை வாழ்க்கையில் இரண்டு பிள்ளைகளும் பிறந்திட்டதால என்னால வேலையொன்றுக்கும் போக முடியல. குழந்தைகளின் பராமரிப்போட சரி. வீட்டு வாடகைகள், குழந்தைகளின் மெடிகல் செலவீனங்களென வாழ்க்கை தள்ளாட ஆரம்பிக்கையில் கொரோனாவின் தாக்கமும் லொக் டவுன்களுமாகச் சென்னை வாழ்க்கை தாக்குபிடிக்காமல் போக அவனுடைய ஊரான சேலத்துக்கு இடம்பெயர்ந்தம். இங்க அவனுடைய குடும்பத்துக்குச் சொந்தமான வீடிருக்கு, அதிலதான் வாடகைப் பிரச்சனை இல்லாம இருக்கிறம்."

"அப்போ அம்மா இன்னும் முகாமில தனியத்தான் இருக்கிறாங்களா."

"ம்ம்ம்... நல்லாய்ச் சொன்னீங்க மாமா... இந்த ஓடுகாலி முண்டை என்னிக்கு அம்மாவை விட்டுத் தொலைஞ்சனோ அந்த ஆண்டே அவ சந்திரஹாஸன் ஐயாவின்ட உதவியால எழுதிக் கொடுத்திட்டு ஊருக்குப் போயிட்டா, அவவுக்கு இப்போ விதவைகள் உதவிப் பணம் சமுர்த்தி* பணம் எல்லாம் கிடைக்குது, அங்கே மூத்தக்கா, நடுவிலக்காவோட கரவெட்டியில நல்லபடி வாழுறா."

“அப்பச் சரி... இப்ப உமக்குள்ள முதலான பிரச்சனைதான் என்ன.”

“இவன் இங்கே வந்தாப்போல - பாலம் - என்கிற ஒரு பப்ளிஷிங் கொம்பனியில கொஞ் சநாள் வேலை பார்த்தான். ஆரம்பத்தில புறூஃப் றீடராய்த்தான் இருந்தான். பிறகு அவங்களுக்கான சில மொழிபெயர்ப்பு வேலைகளையும் செய்தான். இவனுடைய மொழிபெயர்ப்புத்தான் சரியில்லையோ அல்லது அவர்களை இவனால அனுசரிச்சுப் போக முடியலையோ மூன்று மாதத்தில அந்த வேலைக்கும் முழுக்குப்போட்டான்.”

“ம்ம்ம்... சொல்லும்.”

“இப்ப இவன் இங்க உழைக்கப் போறானில்லை... உடம்பும் கள்ளப்பட்டு எப்பவும் அடைக்கோழி மாதிரி வீட்டுக்குள்ளயே கிடக்கிறான். எங்க நாடு மாதிரியில்லை மாமா, உழைக்கத் தயாரா இருந்தால் இங்கே ஏதாவதொரு வேலை செய்து பிழைச்சிடலாம். ஒரு பெட்டிக்கடையோ, வெத்திலைக் கடையோ போட்டாலே சுமாரான வருமானம் வரும். அரசின் ‘நூறு நாள் வேலைத் திட்டம்’ என்று ஒன்றிருக்கு, அதில நானாய் இவனைத் தள்ளிக்கொண்டு போய்ப் பதிஞ்சதில அவங்க ரேஷன் கடையில பில் போடிற, சாமான்களை ஸ்டொக் எடுக்கிற / செக்பண்ணிற இப்படியானதொரு வேலை கொடுத்தாங்க. அந்தக் கடைத்தூசி தனக்கு ஒத்துவரேல்லையென்று சொல்லி ஒரு வாரங்கூடத் தாக்குப் பிடிக்காம வீட்டை வந்திட்டான். வீட்டுகளுக்கு வெள்ளையடிக்கப்போனால்க்கூட ஐநூறோ அறுநூறோ கொடுப்பாங்க மாமா, இவன் போறானில்லை. ‘நான் எம்.ஏ. இங்கிலீஷ் லிட்டரேச்சர்.. போய் ஏணியில் ஏறி எப்புடிடி சுவத்துக்கு வெள்ளையடிப்பேன்’ எங்கிறான்.

“நீ ஏணியில் ஏறாம கீழை மட்டும் அடி, மேலெ அடிக்கிறதை மத்தாக்கள் பாத்துப்பாங்க”ன்னா மொறைக்கிறான்.

“எங்கட மாமா பி.டெக். படிச்சவர், ரொறொண்டோவில டென்னிஸ் போல் பொறுக்கிக் கொடுக்கிறராம் தெரியுமோ” என்றால் அதெல்லாம் லேபர் டிக்னிட்டி உள்ள நாடுகள், அங்க பொறுக்கலாம் நம்மூர்ல முடியுமா” எங்கிறான்.

அப்பா இறந்ததோடு சித்தியும், தலித்தான அப்பாவின் இறுதிச் சடங்குகளுக்கே வரமறுத்த மாமாவும் அப்பப்ப அனுப்பிற இருநூறோ முன்னூறோ டொலருகளில மானங்கெட்டு வயித்தைக் கழுவிக் காலம் போக்கிறன். இவன் இப்பவும் ‘அவங்களை இன்னும் கொஞ்சக்காலத்துக்கு உதவி செய்யச்சொல்லு, பிறகுபார் நான் எப்பிடி உழைக்கிறேன்”னு பீத்தறான் மாமா. எதுவும் பண்றானில்லை.

‘அடே... அங்கே சித்தியும் ஒரு சீனியர் சிட்டிஷன் ஹோம் ஒன்றில செவிலி வேலை பார்த்துத்தான் பிழைக்கிறாவாம், ’நானும் பிள்ளைகளும் என் சோம்பேறிப் புருஷனும் தின்னுறதுக்குக் காசு அனுப்புங்கோவென்று எந்த முகத்தை வைச்சுக்கொண்டு அவங்களைக் கேட்பேன் சொல்லு’ என்றால் முறைக்கிறான்.”

“சோம்பேறியாய் இருப்பதைவிட வேற ஏதாவது கெட்ட பழக்கங்கள்.. சிகரெட் தண்ணி இப்பிடி...”

“அப்பிடித் தண்ணிப் பழக்கம் ஒன்றுமில்லை, இன்னும் ஒருநாளும் அது அவனில மணக்கேல்லை. கல்லூரி நண்பர்களிடம் பழகினதாம்... சிகரெட் பிடிக்க மட்டும் விருப்பம். அதுவும் நான் வாங்கிகொடுத்தாதான் உண்டு. இல்லேன்னா ‘தேமே’ன்னு இருப்பான். சிலவேளை பார்க்கப் பாவமாயுமிருக்கும். சிட்டி லைப்றரிக்குப்போய் சேகுவேரா, கார்ல்மார்க்ஸ், தாஸ்தயெவ்ஸ்கி, கணையாழி, அம்ருதா, கவிதைப் புத்தகங்களென்று ஒருசுமை புத்தகங்களாய் எடுத்துக்கொணாந்து வைச்சு வாசித்துக் கொண்டிருப்பான். ஷோக்காளிகள், கூட்டாளிகள் பின்னால எல்லாம் போகமாட்டான்.”

“அப்போ அவன்ல எதைப் பார்த்து மயங்கினீராம்...”

“முதல்ல அவன்ர சாமர்த்தியங்கலந்த வக்கணையான பேச்சுத்தான், ‘இந்தா எலெக்ஷன் வரட்டும், அடுத்த மாதமே எனக்கு தனியார் பள்ளிக்கூடத்தில டீச்சிங் போஸ்ட் கிடைச்சிடும். நான் நிர்மாணிக்கப்போகிற சொர்க்கத்துக்கு இன்னும் இரண்டு கி.மீட்டர் தொலைவுதான்...’ என்கிற மாதிரிக் கதைகளை எடுத்து விட்டானா, மயங்கிட்டன்.

“கப்பல்லயோ சவூதிப் பக்கமோ போவேன்டா என்றால், ‘ஏன் அப்ப பார்த்து நீ சிலோனுக்கு ஓடவா’ எங்கிறான்.

அவனுக்கு நான் சிலோனுக்குப் போகவுங்கூடாது, இங்கேயே இருந்து யாரிடமிருந்தாவது பணம் வரவழைத்துக்கொண்டு அவனோடயே இருக்கணும். ‘ராஜா ராணி’ படம் பார்த்தீங்களா மாமா, அதில ஆர்யா இருப்பாரே படுசோம்பேறியா, வீட்டில புரண்டுபுரண்டு படுத்துக்கிட்டு. ஆனால், காதல் பண்றதில மட்டும் சுறுசுறுப்பா தீவிரமா அந்த ஆர்யா மாதிரியே சோம்பேறியா இருக்கான் மாமா.

எங்கப்பாவே கரவெட்டி கோபரேடிவ் யூனியன்ல ஒபிஸரா இருந்தவர், இங்க எத்தனையோ பேருக்கு சைக்கிள் றிப்பேர் பண்ணி / ஓயில் சேர்விஸ் பண்ணிக் கொடுத்துக் காசு பார்த்திருக்கார். இவன் உடம்பை வசைக்கவே பஞ்சிப்படறான்.”

கீர்த்தன்யாவின் முகநூலில் அவள் ‘புரொஃபைல்’ பக்கத்தைப்பார்த்தேன், நாலுவயதில் ஒரு ஆணும் இரண்டு வயதில் ஒருபெண்ணுமாக இரண்டு அழகான குழந்தைகள் மொழுமொழுவென்று, அவள் புருஷனும் துல்கர் சல்மான் மாதிரி வாட்டசாட்டமாயும் எந்தப் பெண்ணையும் கவரும்படியான அழகனாயுமிருந்தான். அவனோடு அவள் சொல்றமாதிரியொரு சோம்பேறித்தனத்தைப் பொருத்திப் பார்க்க முடியவில்லை.

“அவனுக்கென்று குடும்பச் சுமைகள் ஏதாவது...”

“அப்படியான கடமைகள் பொறுப்புகள் இருந்தாலாவது இவன் ஒருவழிப்பட்டிருப்பான். அவனுக்கப்படி ஒரு இழவுமில்லை, அதுதான் அவனது பிரச்சனை. இவனுக்கு மூத்தது இரண்டு தமக்கைக்காரியள், இரண்டு பேரும் வசதியான



இடங்களில வாழ்க்கைப்பட்டு நல்லாயிருக்காளவை. இவன் கடைக்குட்டி. தகப்பனும் நேரத்துக்கே செத்துப்போக தாய்க்காரி நோகவிடாம செல்லமாய் வளர்த்திருக்காப்பல, பொறுப்பில்லாமல் அம்பலத்து ஆடு மாடு மாதிரி வளந்திட்டான். தாய், இரண்டு மகள்களுடனும் மாறி மாறி இருக்கிறார். இவனுக்கு ஒரு பொறுப்போ சுமையோ எதுவுமில்லை, அதுதான் இப்படிக் குட்டிச்சுவராகிட்டான்."

"சரி அவனுக்கு விருப்பமான விஷயங்கள், நல்ல குணங்கள்தான் என்ன..."

"சாப்பாடுன்னா மீன் குழம்பு, பொரியல் இரண்டும் பிடிக்கும், மாங்காய்போட்ட நம்மபாணிச்சொதியையும் நல்லா ருசிச்சுச் சாப்பிடுவான். மச்சந்தான் வேணுமென்றெல்லாம் அடம்பிடிக்கமாட்டான். உருளைக்கிழங்கென்றாலும் இரண்டு நெய்த்தலிக் கருவாட்டைப் போட்டுத் தீயலாக வைத்துக் கொடுத்தாலோ / சீனிச் சம்பல் அப்பளத்தோடு சோறுகொடுத்தாலோ முனகாமல் சாப்பிட்டிட்டு எழும்பிப்போவான். எப்போவாவது கடையில இருந்து சாமான்கள் வாங்கிவரும்போது யாராவது மறித்துப் பசிக்குதென்று முனகினால் பாதிச் சாமான்களை அவங்களுக்கே தூக்கிக் கொடுத்திடுவான். மழை பெய்தால் ஜன்னல் பக்கமாய் நாற்காலியைப் போட்டு உட்கார்ந்து சிகரெட் பிடித்தபடி அது ஓயுமட்டும் பார்த்துக் கொண்டிருப்பான்."

"மற்றும்படி இப்ப உமக்கு என்னதான் ஆகவேணும், அதைச் சொல்லும்"

"ஊரோச்சம் வீடு பட்டினி மாமா... அநேகமாய் ஒவ்வொரு நாளும் ஒரு நேரந்தான் நானும் குழந்தைகளும் சாப்பிடறோம். (இதைச் சொல்கையில் அவளுக்குப் பீறிட்டுக்கொண்டு வந்த அழுகையால் மேலும் பேச முடியாமல் திணறினாள்.) சொறி மாமா... அப்புறமா கூப்பிடறேன்" என்றுவிட்டுப் போனை வைத்துவிட்டாள்.

மிகவும் பொருண்மியமுடையில் இருக்கிறாள் என்பது தெரிந்தது. வெஸ்டர்ன் யூனியன் மணி டிரான்ஸ்பர் மூலம் 250 யூரோ அனுப்பிவைத்தேன்.

மறுநாள் கிடைத்ததும் உடனே போன் எடுத்தாள்.

"ரொம்ப ரொம்ப ரொம்பத் தாங்க்ஸ் மாமா... நான் கொஞ்சமும் எதிர்பார்க்கல, இப்படி என் கிரிடிகல் டைம்ல ஹெல்ப் பண்ணுவீங்கன்னு... இவனுக்கு யார் பணம் அனுப்பினதுன்னே தெரியாது, எங்க மாமாதான் அனுப்பியிருக்கார்னு நெனெச்சுக்கிட்டு இருக்கான்... பணம் கெடச்சதும் என்ன சொன்னான் தெரியுமா, உங்க சித்தியையும் 200 டாலர் அனுப்பச் சொல்லிக்கேளுடி, எனக்கு வேலை கெடச்சதும் மொத்தமாய்த் திருப்பிடலாங்கறான்..

"இப்போ பத்து வருஷமாய் எங்கள் குடும்பத்தைத் தாங்கிவாறாங்க, இனிமேலும் இங்கிதங்கெட்டு அவரைப் பாரப்படுத்தினா, 'அடேய்... அச்சுணைக்கெட்ட கூத்தி, தன் புருஷனை ஆட்டாமல் வைச்சிக்கொண்டிருக்கச் சொல்லிட்டு என்னைய மட்டும் முறிக்கிறாளே'யெண்டு நினைக்கமாட்டாவா சித்தி; சித்தப்பா சலிச்சுக்கமாட்டாரா" என்றால் வழமைபோல அசடு வழியுறான் மாமா.

என் குடும்பத்தினருக்கு சாதியம் பற்றிய நவீன காலத்துக்கான நிலைப்பாடுகள் இல்லாவிட்டாலும், அவர்கள் சொன்ன அருமையான புத்திமதிகளையாவது கேட்டிருந்தால் இத்தனை வாதனைகளுடனானதொரு வாழ்க்கையைத் தேடியிருக்க வேண்டாமேன்று இப்போ தோன்றுது. என்னிலும் பெரிய தவறு இருக்கு, என் பெற்றோரின் சொல்லை உதாசீனப்படுத்தி

என் தலையில நானே மண்ணையள்ளிப் போட்டின்டிட்டன். நான் ஒரு பாவி, என் பெற்றோருக்குச் செய்த துரோகத்துக்கு எனக்கு எந்தப் பிறவியிலும் பாவவிமோசனம் கிடைக்காது மாமா."

எங்கேதான் பிடித்தாளோ… 'வாதனை', 'பின்னடைவு', 'நரகம்,' 'பாவம்', 'உத்தரிப்பு' என்கிற சொற்களைத் தன் பேச்சு முழுவதும் கலந்துதூவிப் பிரயோகித்தாள்.

"The past is past... இனி என்ன செய்யலாங்கறீர்."

"ப்ளீஸ் கோச்சுக்காதீங்க மாமா… இனிமேல் நீங்க எனக்கு பணம் எல்லாம் அனுப்ப வேணாம்… அது நான் இதுக்காகத்தான் உங்களைப்போன்ல அழைச்சேன்னா கிடும்… நீங்க சப்போர்ட் செய்யவேண்டிய குடும்பங்கள் உங்களுக்கும் ஊரில நிறைய இருக்கும்… எனக்கு நீங்கள் எனக்கு ஒரேயொரு உதவிமட்டும் செய்தாகணும்… எனக்கு நீங்கள் இவங்கிட்டயிருந்து விடுதலை பெற்றுத்தரணும். அப்படி நீங்களும் பெற்றுத்தராவிட்டால் எனக்கு இரண்டு வழிகள்தான் இருக்கு, லாரிக்கோ ரயிலுக்கோ முன்னால பாயிறது, இல்ல போட் ஏறி நேவிக்காரன் சுட்டாலும் பிள்ளையளோட ஊருக்கே போயிடறது."

"அதெல்லாம் எனக்குச் சரியாய்ப் படேல்லை…"

"ஏன் அப்பிடிச் சொல்றீங்க…"

"இப்படி லூஸுத்தனமாய்க் கதைக்கிற தென்றாலோ, முந்தித் தன்னிச்சையாய் முடிவெடுத்ததுப்போல இப்பவும் சொந்தமாய்த்தான் முடிவுகள் எடுப்பீரென்டால் என்னோட ஆலோசனைகள் உமக்கு இனித் தேவைப்படாது."

"இந்த உலோகத்திலேயே என்னை ஒருத்தருக்கும் பிடிக்காதுதான் மாமா… நீங்களும் என்னைக் கைகழுவி விடுறியளோ…"

பின்புலத்தில் விசும்பல் கேட்டது.

"இலங்கைக்கேதான் போயிட்டாலும் அங்கே போய்ச் சேர்ந்த பின்னால பேசாமல் இந்தியாவிலயே இருந்திருக்கலாம் என்கிற நினைப்புத்தான் வரும். எப்போதும் இக்கரைக்கு அக்கரைப் பச்சைதான்."

"இப்ப அம்மா நாலு வருஷங்களாய் நிவாரணங்கள், சமுர்த்தி உதவிகளோட என்ன மாதிரிச் சீவிக்கிறா; ஆக மிஞ்சினால் பிள்ளைகளை அம்மாவோடயோ அக்காளவையோடயோ விட்டிட்டு நான் நெசவுக்குப் போவன், பீடிசுற்றப் போவன், பன்னவேலைக் கூடங்களுக்குப் போவன்."

"அதையே உங்க செய்யேலாதோ…"

"பிள்ளையளோட என்னண்டு மாமா…" என்றுவிட்டு விசும்பினாள். பின் சற்றே இடைவெளிவிட்டு, "இந்தக் குழந்தைகள் மட்டும் எனக்கு ஜனித்திராவிட்டால் நான் நாலு வீடுகளில பற்றுப் பாத்திரங்கள் தோய்த்தோ சமையல்வேலை செய்தோ பிழைச்சிடுவன். இதெல்லாம் நானே வலிந்து விலைகொடுத்து வாங்கின 'வாதனைகள்'" என்றுவிட்டு மீண்டும் அழுதாள்.

"நீர் முறைப்படி பிரிஞ்சு போறதென்றால் உம்முடைய புருஷனுடைய சம்மதத்தோடதான் அதைச் செய்யலாம். அதுக்கு நான் வீடியோ போனிலோ, கொன்ஃபரன்ஸ் போனிலோ அவரோட லைஃபா கதைக்க வேணும்."

"என்னையே போகக்கூடாது என்றிருக்கிறவன் எப்படி மாமா உங்களோட கதைப்பான்…"

"சரி… உமக்குச் செல்லுபடியான பாஸ்போர்ட் இருக்கோ."

"இருக்கு."

"எத்தனையாம் ஆண்டு உங்கே போன்னீங்கள்."

"இரண்டாயிரத்து ஆறில."

"உங்க போயே 15 வருஷமாச்சு, எப்பிடிப் பாஸ்போர்ட் செல்லுபடியானதாய் இருக்கும். இடையில எப்பவென்றாலும் ரினிவல் செய்தனீங்களோ."

"அப்பிடி ஒரு ஞாபகமும் இல்லை. அப்பா அடிக்கடி கொன்சுலேட்டுக்கோ எங்கேயோ போய்வாறவர், ஒருவேளை புதுப்பிச்சாரோ தெரியேல்ல. நான் சிலோனுக்கு ஓடிவிடுவனோங்கிற பயத்தில அதை அவனே பிடுங்கி வைச்சிருக்கிறான், அவன் இல்லாத நேரமாய் எடுத்துச் செக் பண்ணிட்டுச் சொல்றன் மாமா."

"'செக்' பண்ணாவிட்டாலும் பரவாயில்லை, 2006இல் எடுத்த பாஸ்போர்ட் ரினிவல் செய்யாவிட்டாலும் 2016இல காலாவதியாகியிருக்கும். சரி அப்ப உன்னுடைய பிள்ளைகளின்ர பெயருகள் பாஸ்போர்ட்டில Endorse பண்ணேல்லையே."

"இல்லை… அப்பிடியின்று.. செய்யேல்ல."

"குழந்தைகளுக்கு பேர்த் சேர்டிஃபிகேட்டுகளாவது இருக்கா."

"இல்லை ஆஸ்பத்திரிப் பதிவுகள்தான் இருக்கு. இஞ்ச அதை வைச்சுத்தான் பாஸ்போர்ட் எடுக்கிறவை."

"அது இந்தியக் குழந்தைகளுக்கு ஓகே… ஆனால், நம்மவருக்கு அது போதாதம்மா, பேர்த் சேர்டிஃபிகேட்ஸ் எடுத்து அவர்களை உம்முடைய பாஸ்போர்ட்டிலோ, மனுஷனுடைய பாஸ்போர்ட்டிலோ பதிஞ்சிருந்தாலே நீர் குழந்தைகளுடன் ஒரு நாட்டுக்குப் போகலாம்."

"அவனுக்கெ எங்கே இருக்கு பாஸ்போர்ட்… ரேஷன் அட்டையும் ஆதார் அட்டையுந்தான் வைச்சிருக்கான்."

இப்போ எனக்கு சந்தேகம் வலுத்தது.

"ஏன் உமக்கு ஆதார் அட்டை இல்லை."

"நாங்கள்தான் இன்னும் ஒஃபிஷியலா பதிவுத் திருமணம் செய்யேல்லையே."

'அதுக்குள்ள பிள்ளைகள் மட்டும் பெத்துக்கிட்டாயாக்கும்' என்றுதான் வாயில் வரப் பார்த்தது, அடக்கிக்கொண்டேன்.

"இப்ப நீர் ஊருக்குப் போறதென்றால்… எமேர்ஜென்ஸி பாஸ்போர்ட் என்றொரு பாஸ்போர்ட் இருக்கு, அதை எடுத்துக்கொண்டு நீ போகலாம்.

ஆனால், பேர்த்சேர்டிஃபிகேட் இல்லாத குழந்தைகளை அதில் பதிய இயலாது."

"ஒருநாள் இவன் 'நீ அறுதியாய் சிலோனுக்குத்தான் போறதென்று முடிவெடுத்திட்டால் நான் பாஸ்போர்ட் எடுத்து அதில பிள்ளைகளைப் பதிஞ்சு உன்னைய சிலோனில கொண்டுவந்து விடுறேன்' என்டவன்."

"அப்படித்தான் அவர் கொண்டுவந்துவிட்டாலும் இந்தியாவில பதிவுள்ள ஒரு பிள்ளைக்கு இலங்கையில லேசில அடையாள அட்டையோ, இலங்கைக் குடிமக்கள் என்கிற பிரஜாவுரிமையோ கிடைத்துவிடாது. அங்கே இப்போ ஆட்பதிவுகள் எல்லாம் டிஜிட்டலைஸ்ட் பண்ணியிட்டாங்கள். போலியான ஆவணங்கள் தயாரிப்பதென்பது கனவிலும் சாத்தியப்படாது. அடுப்பிலயிருந்து நெருப்புக்க விழுந்திடாதை கிளி and please don't try to paly any childish silly games."

அவள் நடப்பிலுள்ள சட்ட திட்ட முறைகள் எதையும் அறியாமல் இன்னும் 12 வயதிலேயே இருந்தாள்.

"நீர் எமேர்ஜென்ஸி பாஸ்போர்ட் எடுக்கிறதுக்கும் உம் புருஷன் பாஸ்போர்ட் எடுக்கிறதுக்கும் அதில உங்க பிள்ளைகளைப் பதியிறதுக்கும் நான் ஜெர்மனியிலிருந்துகொண்டு என்ன செய்யலாங்கிறீர்... 'பி பிராக்டிகல்'மா."

அன்றைக்கும் நிறைய அழுதுவிட்டுத்தான் போனை வைத்தாள்.

அடுத்த நாள், "இவனோட இனி எனக்கு வாழமுடியாது மாமா, நாங்கள் இப்ப ஆறேழு மாசமா ஒருத்தரோட ஒருத்தர் கதைக்கிறதேயில்லை."

"இது எப்படியாச்சு..."

"நீ ஆம்பிளையா ஒரு நாளைக்கு நூறு ரூபா என்றாலும் உழைச்சுக் கொண்டுவராத வரையிலும் என் மூஞ்சியைப் பார்த்துப் பேசாத... கதைக்காத' என்று சொல்லி நானாகவே அவனைவிட்டு விலகியிட்டன்."

"அப்ப யார்தான் கடைகண்ணிக்குப் போகிறது, சாமானுகள் வாங்கிறது... யார் சமையல் பண்றது... எப்படிச் சமாளிக்கிறீர்கள்."

"ஏதோ முன்னயெல்லாம் அவந்தான் சாமான், சாமானாய்வாங்கியந்து குவிச்சமாதிரி நெனச்செல்லோ கேட்கிறியள். முன்னயும் நான்தான், இப்பவும் நான்தான், சித்தி மாமாவின் உதவி இல்லாட்டி எப்போவோ செத்துச் சாம்பல் மேடாயிருப்பம்."

மீண்டும் அவளுக்கு அழுகை வெடிக்கிறது, "சரி... அழாதையும். கொளுத்தாடுவாற நேரங்களில அவனுக்குக் கைகால் நீட்டிற பழக்கமும் இருக்கோ..."

"அவனுக்கு ஆரம்பத்திலேயே தெளிவாய்ச்சொல்லி வைச்சிருக்கன், அப்படி ஏதும் பண்ணினாக்க... மாலதி அக்கா செய்தமாதிரித்தான் செய்வனென்டு."

"அப்பிடி என்னதான் செய்தா மாலதி..."

"புழல் முகாமில அவகல்யாணம் செய்து மூணே மாசம் புருஷனோட எதுலயோ தகராறு வந்திட்டாப்பல. அவன் ஒரு கட்டத்தில அவளுக்குக் கையை நீட்டிட்டான். அன்னிக்கிரவே அவ சயனைட் கடிச்சுச் செத்துட்டா.

இவன் அந்த அளவுக்கெல்லாம் போகமாட்டான் என்றுதான் நெனக்கிறன் மாமா... நேத்து மட்டும் எங்க பிடிச்சானோ ஒரு கோழி கொணாந்து தானே உரிச்சும் தந்தான், சமைச்சுக்கொடுத்தன் சாப்பிட்டான். நான் வியாழன் வெள்ளியில கவிச்சி சாப்பிடமாட்டன், அதனால் எனக்கு சோயாவிலயொரு குழம்பு வைச்சு அப்பளமும் சுட்டனான். இவனுக்கொரு வருமானமில்லாததால ஒரு அவசரத்துக்கு பக்கத்து வீடுகளில கைமாத்தோ கடனோ வேண்டக்கூடப் பயமாயிருக்கு. நான் ஒரு இளவரசியைபோல வாழ்ந்தனான் மாமா, சிலோனில எனக்கு அரிசி என்ன விலையென்றே தெரியாது. இஞ்சவந்து இத்தனை உத்தரியப்படுறன். எனக்கு வேறொரு உதவியும் வேண்டாம்... நீங்கள் நினைச்சாச் செய்யலாம் மாமா, இங்கேயுள்ள ஏதாவதொரு அகதிகளுக்கான அமைப்பைத் தொடர்புகொண்டு என்னை இவனிட்டயிருந்து விடுதலை செய்து வடமராட்சிக்கே அனுப்பி வைச்சிடுங்கோ, உங்களுக்குக்கோடி புண்ணியம் கிடைக்கும் ப்ளீஸ் ப்ளீஸ், ப்ளீஸ்... எனக்கு அப்பா இருந்திருந்தால் இத்தனை வாதனைகள் வந்திராது, அவருடைய நிழல்ல ஒரு ராணி மாதிரி வாழ்ந்திருப்பன், என்ர மதியையும் மயக்கிப் பாதையை மாற்றிவைச்ச கடவுள் என்னுடைய தெய்வத்தையும் தன்னோட அழைச்சிட்டான்."

சென்னையிலுள்ள சில சட்டவாளர்கள், தீவிர மாதரமைப்பு மற்றும் சமூக சேவைகள் செயற்பாட்டாளர்களிடம் பேசிப் பார்த்தேன்.

'கடவுச் சீட்டுகள், பிறப்புப் பதிவுகள், பிறப்பு அத்தாட்சிப் பத்திரப் பதிவுகள் எல்லாம் இலங்கைத் தூதரகம் சம்பத்தப்பட்ட வேலைகள். அவற்றுக்கு நாங்கள் எதுவுஞ் செய்வதற்கில்லை. மற்றைய விடயங்கள் இது ஒரு தனியனின் பிரச்சனையல்ல, ஒரு குடும்பத்தின் பிரச்சனை. இப்பிடி எம்மவரே பல இலட்சம்பேர் இருக்காங்க சார், இதுக்கு நாங்கள் என்ன செய்யலாம்.' என்றுவிட்டுக் கழன்றுவிட்டார்கள்.

அதையே கீர்த்தன்யாவிடமும் சொல்லிப் பார்த்தேன்.

"இதுவெறும் அகதிப் பிரச்சனை மட்டுல்ல, ஒரு குடும்பத்தின் பிரச்சனை. உங்களுக்கு இரண்டு குழந்தைகள் இருக்கு... ஒரு குடும்பத்தைப் பிரிச்சுவைக்க எந்த அமைப்பும் முன்வராது. ஒரு குடும்பத்தைப் பிரிச்சு அதில தாயையும் பிள்ளையையும் சிலோனுக்கு அனுப்பி வைக்கிறது என்னால சாத்தியப்படுமோ தெரியேல்லடா."

கீத்தன்யாவின் வார்த்தையில் அவளின் வாதனைகளும் அவலங்களும் முகநூல் போகும் வேளைகளில் எல்லாம் என் மனதையும் அலைக்க ஆரம்பித்திருந்தன. 'பேச்சுக்களில் நிரம்பக் கோபக்காரிபோலத் தெரிந்தவள் ஆற்றாமையின் உச்சத்தில் ஏதும் பூச்சி மருந்தைக் குடித்துச் செத்துப் போய்விடுவாளோ' என்கிற பயமும் உள்ளூர என்னைத் தொட்டிருந்தது. முகம் தெரியாத ஒருத்தியின்



துன்பங்களை என் மனதில் ஏற்றிக்கொண்டு திரிவது பெருஞ்சோதனையாக இருந்தும் எதுவும் செய்யமுடியாத கையறு நிலையிலிருந்தேன்.

இரண்டு மூன்று மாதங்கள் மெல்ல நகர்ந்திருந்தன, அவளிடமிருந்து போனோ புலம்பல்களோ எதுவும் வரவில்லை. ஒருஇரவு பின்சாமத்தில் விழிப்பு ஏற்படவும் கழிப்பறை சென்றுவந்து கணினியில் அமர்ந்து ஐ.பி.சி. செய்தியை வைத்தேன்.

நள்ளிரவில் வள்ளமொன்றின் மூலம் தாயகம் திரும்பிய இலங்கை அகதிகளில் ஒரு இளந்தாயும் இரண்டு பிள்ளைகளுமுட்பட அறுவர் இலங்கைக் கடற்படையால் கைதுசெய்யப்பட்டிருப்பதாகவும் கொவிட்- 19 சோதனையில் அக்குழந்தைகளின் தாயுக்கு தொற்று இருப்பது கண்டமையால் அவர் தடுப்புக்காவலில் தனிமைப் படுத்தப்பட்டுள்ளார்; பிள்ளைகள் இருவரும் ஆதரவற்ற ஏதிலிக் குழந்தைகள் காப்பகமொன்றில் சேர்க்கப்பட்டுள்ளனர் என்றும் செய்தி போனது.

'பிடிவாதக்காரியான கீர்த்தன்யாதான் வள்ளத்தில போய்த் தொலைஞ்சிருக்கிறாள்போல இருக்கு, பாதிச்சோதனை தீர்ந்தது' என்று என்னளவில் சமாதானமாகி, அவளாலான மனச்சுமை இறங்கியதென்று சிறுநிம்மதியுடன் இருந்தேன்.

திடுப்பென ஒரு நாள் அதிகாலையில் இந்திய நம்பர் ஒன்றிலிருந்து போன் வந்தது, அவள்தான் பேசினாள்.

ஆச்சரியத்தைக் காட்டாமல் இயல்பாய், "எப்படிடா இருக்கிறாய் கிளி..." என்றேன்.

"நல்லாயிருக்கிறேன் மாமா, இப்ப இங்க சேலத்தில புத்தகக் கண்காட்சி ஒன்று நடக்குதல்லோ..."

"அறிஞ்சேன் சொல்லும்."

"முந்தி இவர் வேலைபார்த்த பப்ளிகேஷன் இவரை ஒரு ஸ்டோலுக்கு இன்சார்ஜாக நியமிச்சிருக்காங்க, புக்ஸ் விற்பனையின்படி ஏதோ கொமிஷன் பேஷிஸில் சம்பளம் கொடுக்கிறாங்க. நேராய்க்கொண்டுவந்து என்னிடமே தந்திடுறார்... 'வழுதி' is a Gem of men you know... கண்காட்சியின் பிற்பாடும் புக் ஷொப்பை அதிலயே நிரந்தரமாக வைக்கப்போறங்களாம். தமிழர்கள் நிறையப் பேர் புக்ஸ் வாசிச்சாங்கன்னா பிழைச்சுப்போம்" என்றுவிட்டுக் கலகலவென்று முதன்முறையாக என்னிடம் சிரித்தாள்.

'அவன்' 'இவன்' என்ற அவளது ஒருமை 'விளி'கள் இப்போ 'அவர்' 'இவர்' என்று மாறியிருந்ததோடு அவரது பெயரையும் 'வழுதி' என்று அவள் இப்போதுதான் முதன்முறையாக அழுத்தமான பலுக்கலோடு சொன்னாள்.

"இன்னோரு விஷேசம் மாமா... நான் இப்ப ஆறு மாசம் முழுகாம இருக்கேன், ட்வின்ஸ் பேபியாம் டாக்டர் சொல்லிற்றா..."

பிறகும் கலகலத்துக் கனகதாரையாக என்மேல் சிந்தினாள், சித்தத்தால் நாத்திகனானாலும்... தேஷில் தோய்ந்துகொண்டு "வாதனைகள் பல சோதனைகள் ரகுநாதனை நினைந்திடில் நாடுமோ..." என்று பாடவேணும் போலிருந்தது.

**"பொ. கருணாகரமூர்த்தி"**
**<karunah08@yahoo.com>**

*சமுர்த்தி: இலங்கை அரசு வேலையற்றவர்களுக்கு வழங்கும் நிவாரணம்.

# அம்ருதா பதிப்பக வெளியீடுகள்




விலை ரூ.120/-




விலை ரூ.100/-




விலை ரூ.140/-




விலை ரூ.100/-




விலை ரூ.100/-




விலை ரூ.150/-




விலை ரூ.120/-


**அம்ருதா பதிப்பகம்**

அம்ருதா, 1 கோவிந்த ராயல் நெஸ்ட் அடுக்ககம், 12 இரண்டாவது தெரு,
மூன்றாவது பிரதான சாலை,
சி.ஐ.டி நகர்-கிழக்கு, நந்தனம், சென்னை-600035.
அலைபேசி: 94440 70000

# தமிழ் இருக்கை
# நிதி திரட்டிய அனுபவங்கள்

அ. முத்துலிங்கம்

*ஹார்வர்ட் தொடக்கம்*

அமெரிக்காவில் இரண்டு மருத்துவப் பெருந்தகைகள் தமிழ் இருக்கை தொடர்பாக ஆர்வத்தோடு ஹார்வர்டு அதிகாரிகளைச் சந்தித்தபோது நானும் கூட இருந்தேன். ஆளுக்கு அரை மில்லியன் டொலர்கள் நன்கொடை வழங்கி நிதி திரட்டலை ஆரம்பித்து வைத்தார்கள். தேவையான இலக்கு 6 மில்லியன் டொலர்கள். அதைத் தொடர்ந்து ரொறொன்ரோ பல்கலைக்கழகத்திலும் தமிழ் இருக்கைக்கான நிதி சேகரிப்பு தொடங்கியது. அவர்கள் இலக்கு 3 மில்லியன் டொலர்கள். 2016இல் தொடங்கி 2020 வரைக்கும் நிதி திரட்டல் தொடர்ந்து முடிவை எட்டியது. இந்த நாலு வருடங்களும் நான் எழுத்து வேலையை தள்ளிவைத்துவிட்டு இரண்டு பல்கலைக்கழகங்களின் தமிழ் இருக்கைகளுக்கும் முழுநேரமாக நிதி சேகரிப்பதில் மும்முரமாகினேன். உலகமெங்கும் பல நூறு பேர்களுடன் தொடர்புகள் கிடைத்தன. சில அனுபவங்கள் நெகிழ வைத்தன; சில அதிர்ச்சி அளித்தன; சில அவமானத்தால் என்னை நிலைகுலையச் செய்தன; சில சிரிப்பு மூட்டின. எல்லாவற்றையும் இங்கே சொல்ல முடியாது. பத்து வருடம் கழிந்தாலும் நினைவில் நிற்கக்கூடிய சில சம்பவங்களை மாத்திரம் கீழே பகிர்ந்திருக்கிறேன்.

*சிறைக்கைதி*

தமிழ்நாட்டில் ஒரு சின்னக் கிராமத்தில் இளைஞன் ஒருவன் ஏதோ குற்றம் செய்து நாலு வருடம் சிறையில் இருந்தான். அவன் வெளியேறியபோது அவனுடைய உழைப்பு கூலியை சிறை அதிகாரிகள் அவனிடம் கொடுத்தார்கள். அவன் செய்த முதல் வேலை அந்தப் பணத்தை அப்படியே ஹார்வர்டுக்கு அனுப்பியதுதான். எப்படியோ, யாரையோ பிடித்து பணத்தை செலுத்திவிட்டான். அவனுக்கு ஹார்வர்ட் எங்கே இருக்கிறது, அந்தப் பெயரை எப்படி எழுத்துக் கூட்டுவது என்பதெல்லாம் தெரியாது. பிழையான எழுத்துகளுடன் பணம் வந்து சேர்ந்துவிட்டது. தமிழ்நாட்டில் ஒரு பத்திரிகை அவனிடம் எதற்காக பணம் அனுப்பினான் என்று கேட்டது. அவன், “ஹார்வர்ட் உலகப் புகழ்பெற்ற பல்கலைக்கழகம் என்று சொல்கிறார்கள். தமிழ் நாட்டில் தமிழ் வளராது; வெளிநாட்டில் இப்படியான பல்கலைக்கழகத்தில்தான் தமிழ் வளரும். அதுதான் பணம் அனுப்பினேன்” என்றான். என்னை நெகிழவைத்த முதல் சம்பவம் இது.



*50,000 டொலர்*

ரொறொன்ரோ பல்கலைக்கழக தமிழ் இருக்கைக்கு நிதி திரட்டுவதற்காக நான் ஒரு சமயம் பொஸ்டன் சென்றிருந்தேன். அவசரமாக ஒரு டெலிபோன் அழைப்பு கனடாவிலிருந்து வந்தது. முன்பின் தெரியாத ஒருவர் சொன்னார், “தமிழ் இருக்கை முக்கியமானது. நான் இந்த முயற்சியில் உங்களுடன் பங்காற்றுவேன். உங்கள் குழு தாமதமாகவும் அவசரமின்றியும் செயல்படுகிறது. எனக்கு விஜய் டிவியை தெரியும்; சன் டிவியை தெரியும். ஓர் இரவுக்குள் என்னால் 50,000 டொலர்கள் திரட்டமுடியும். உடனே வாருங்கள்.”

எனக்கு மகிழ்ச்சி சொல்லமுடியாது. பல தொலைபேசி அழைப்புகள்; பல மின்னஞ்சல்கள். கடைசியில் ஒருநாள் ரொறொன்ரோ உணவகம் ஒன்றில் அவரை சந்திப்பதற்காக நான் காத்திருந்தேன். முதலில் அவர் வந்தார். தொடர்ந்து அதே உயரமான மனைவி; அதே பருமன். பின்னால் நாலு குழந்தைகள். பெரும் ஆரவாரமாகவும் கூச்சலாகவும் இருந்தது. 50,000 டொலர் திரட்டி வைப்பதாக சொல்லியிருந்தாலும் அது பற்றிய பேச்சே இல்லை. சந்திப்பு முடிந்ததும் கார் கண்ணாடி துடைப்பான்போல இரண்டு பேரும் ஒரே நேரத்தில் சாய்ந்து, ஒரே நேரத்தில் எழும்பி, ஒரே நேரத்தில் நடந்தனர். இப்படியே பல வாரங்கள் ஓடின; ஒன்றுமே பெயரவில்லை.

மதிய உணவுக்கு வழக்கம்போல சந்தித்தோம். அவர் கழுத்திலே தடித்த சங்கிலி. என்னுடன் பேசுவதும் கையிலே கட்டியிருந்த அப்பிள் கடிகாரத்தில் செய்திகள் பார்ப்பதுமாக நேரம் ஓடியது. இது எங்கே போகிறது என்றே எனக்கு தெரியவில்லை. துணிந்து அவரிடம் கேட்டேன். “உங்கள் நண்பர்களும் டிவிகாரர்களும் பணம் தரும்போது தரட்டும். நீங்கள் ஒரு நன்கொடை கொடுத்து தொடக்கலாமே. எவ்வளவு எழுதலாம்” என்று நன்கொடை பத்திரத்தை வெளியே எடுத்தேன். அவர் மிரண்டுவிட்டார். இதை எதிர்பார்க்கவில்லை என்று நினைக்கிறேன். பெரும் யோசனைக்கு பின்னர் சொன்னார், “என்னால் 100 டொலர் கொடுக்கமுடியும். இந்த மாதம் 50 டொலர்; அடுத்த மாதம் 50 டொலர்.”



நான் அன்றைய 7 பேரின் உணவுக்கான தொகை $162ஐக் கட்டிவிட்டு வெளியேறினேன்.

துப்புரவுத் தொழிலாளி

அவருடைய பெயர் தேசோமயானந்தன். பாரிஸிலிருந்து எப்படியோ என் நம்பரை தேடிப்பிடித்து அழைத்திருந்தார். ரொறொன்ரோ பல்கலைக்கழக தமிழ் இருக்கைக்கு எப்படி பணம் அனுப்புவது என்று கேட்டார். நான் சொன்னேன். அவர் வயது 77. நாற்பது வருடங்களாக துப்புரவுத் தொழில் செய்கிறார். திடீரென்று $500 வந்து சேர்ந்தது. "எதற்காக இத்தனை பெரிய தொகை?" என்றேன். அவர் சொன்னார், "ஐயா, என் அம்மா இப்ப இல்லை. தமிழுக்கு கொடுப்பது என் அம்மாவுக்கு கொடுப்பது போலத்தானே" என்றார். பின்னர் விம்மி விம்மி அழத் தொடங்கினார்.

சுந்தர் பிச்சையை தெரியும்

"சுந்தர் பிச்சையை எனக்குத் தெரியும்."

"யார் அது?"

"இது என்ன? கூகிள் நிறுவனத்தின் தலைவர்."

"ஓ, அவரா? எப்படித் தெரியும்?"

"என் பக்கத்து வீட்டுக்காரரின் மாமனாரும் சுந்தர் பிச்சையின் பெற்றோரும் சிநேகிதர்கள்."

"எப்படி?"

"அவர்கள் பஜனைக்கு ஒன்றாகப் போவார்கள், வருவார்கள்."

"அப்படியா?"

"என்ன இப்படிச் சொல்லிவிட்டீர்கள். சுந்தர் பிச்சையின் சம்பளம் எவ்வளவு தெரியுமா? வருடத்திற்கு 2 மில்லியன் டொலர்கள்."

"அதனால் எனக்கு என்ன?"

"அவர் நினைத்தால் ரொறொன்ரோ தமிழ் இருக்கைக்கு ஒரு மில்லியன் டொலர் கொடுப்பார். அது அவருக்கு காசே அல்ல."

"அவருக்கு எத்தனையோ வேலை. இன்னும் எவ்வளவோ பணம் சேர்க்கவேண்டும். இதற்கெல்லாம் கொடுப்பாரா?"

"அப்படி விட முடியாது. நான் இப்பவே எழுதுகிறேன். ஒரு மில்லியன் டொலர் காசோலை வரும். அதற்கு நான் உத்தரவாதம்."

"எப்படி வரும்?"

"கூரியரில்தான். நேராக ரொறொன்ரோ பல்கலைக்கழக முகவரிக்கு அனுப்பிவிடுவார்."

"எப்படி முகவரி கிடைக்கும்?"

"உலகத்துக்கே தேடுதலை சொல்லிக் கொடுத்தவர். அவருக்கு ஒரு முகவரி தேடுவதா பிரச்சினை?"

நண்பர் சொன்னபடியே பக்கத்து வீட்டுக்காரரின் மாமாவுக்கு எழுதிப்போட்டார். அவரும் இதோ, அதோ என்று சொன்னார். நினைவூட்டல்களும் அனுப்பினார். இப்பொழுதெல்லாம் நண்பர் கண்ணில் படுவதே இல்லை. நானோ நம்பிக்கை இழக்கவில்லை. யார் கண்டது? நான் எழுதிக்கொண்டிருக்கும் இந்த நேரம் கலிஃபோர்னியாவிலிருந்து காசோலை கிளம்பியிருக்கும்.

பிரபமல்லாத கல்லூரி

தொலைபேசியில் ஒருவரை அழைத்தேன். அவர் அழைப்பை துண்டிக்காமல் உடனேயே பேசினார். ஆச்சரியமாக இருந்தது. என்னுடைய பெயர் டெலிபோனில் விழுந்தால் ஒருவரும் எடுப்பதில்லை.

'வில்லங்கம் பிடித்தவர் வருகிறார். தமிழ் இருக்கைக்கு நிதி கேட்டு தொல்லைப்படுத்துவார்' என்ற செய்தி எப்படியோ பரவிவிட்டது. ஈழத்துக் கல்லூரிகளின் பழைய மாணவ மாணவியர் சங்கங்கள் நூற்றுக்கு மேலே கனடாவில் இருந்தன. பிரபலமில்லாத கல்லூரிகளில் இருந்து மாணவ மாணவியர் தகுதிக்கு மீறி அள்ளி அள்ளிக் கொடுத்தனர். ஒருநாள் ஓர் அழைப்பு வந்தது. அவரை எனக்கு தெரியாது. நான் சந்தை அழைப்பு என்று நினைத்து டெலிபோனை துண்டித்துவிட்டேன். பத்து நிமிடம் கழித்து டெலிபோனை எடுத்தபோது அவர் இன்னும் எனக்காக காத்து நின்றார். "ஐயா, போன வருடம் 1000 டொலர் அனுப்பினேன். மேலும் 1000 டொலர் அனுப்பவேணும். எப்படி அனுப்புவது" என்றார். எனக்கு சங்கடமாய்ப் போய்விட்டது.

பிரபலமான கல்லூரி

மெய்நிகர் கூட்டம் ஒன்றுக்கு அழைத்திருந்தார்கள். தமிழ் இருக்கைக்கு நிதி சேர்த்து தருவதாக ஒப்பந்தம். குறித்த நேரத்துக்கு அழைத்தேன். என்னால் உள்ளே நுழைய முடியவில்லை; ஆனால், பார்க்கக்கூடியதாக இருந்தது. ஒரு பெண் சாப்பிட்டுக்கொண்டிருந்தார். நான் கத்தினேன். அவருக்கு கேட்கவில்லை. என்னை உள்ளே அனுமதிக்கவில்லை. வாசலிலே நின்றேன். என்னை அழைத்ததை அவர்கள் மறந்துவிட்டார்கள்.

ஈழத்தில் அதிபிரபலமான கல்லூரி ஒன்றின் பழைய மாணவர் சங்கத்துக்கு தமிழ் இருக்கைக்கு உதவுமாறு வேண்டுகோள் விடுத்தேன். இது பணக்காரக் கல்லூரி, 150 வருடங்களாக இயங்குவது. இங்கே படித்தவர்கள் பலர் மருத்துவர்களாகவும் எஞ்சினியர்களாகவும் தொழில் அதிபர்களாகவும் கனடாவில் சம்பாதிக்கிறார்கள். பதில் இல்லை. மின்னஞ்சலில் மன்றாடினேன். தொலைபேசியில் நினைவூட்டினேன். மின்னஞ்சல்களை தலைவர் செவ்வாய்க் கிழமைகளில் மட்டும் பார்ப்பார் என்று சொன்னார்கள். இது என்ன சட்டம்? புதனும் திங்களும் என்ன பாவம் செய்தன? ஆனாலும் காத்திருப்பதில் பிழையில்லை. நிதி சேர்ப்பதில் முக்கியமான விதி, பொறுமை.

பழைய காலப் புலவர்கள் அரசனின் வாசலில் பரிசுக்கு காத்து நிற்பதுபோல நான் நின்றேன். பல மணி நேரங்கள்; பல நாட்கள். ஒரு புலவர் பலநாள் நின்று அலுத்து, 'வாயிலோயே, வாயிலோயே' என்று கூவி அழைத்துவெறுத்துப்போய்'எத்திசைசெல்லினும் அத்திசை சோறே' என்று திரும்பியதுபோல நான் திரும்பப் போவதில்லை. காத்திருக்கிறேன். ஒரு நாள் சூம் வாசல் கதவு திறக்கும். பெரிய பள்ளிக்கூடத்து தலைவர் செவ்வாய்க் கிழமை மின்னஞ்சலை திறப்பார். அவர் இருதயமும் திறக்கக்கூடும். வேறு என்ன வேலை எனக்கு? கதவுகள் திறக்குமட்டும் பொறுமையாக நிற்கவேண்டும்.

மகன் பெயர்

முன்பின் தெரியாத ஒருவரிடமிருந்து சமீபத்தில் கம்புயூட்டரில் ஒரு தகவல் வந்தது. என்னுடைய தொழில்நுட்ப அறிவு மிகவும் குறைச்சலானதால் நான் இப்படி வரும் செய்திகளுக்கு பதில் அனுப்புவது கிடையாது. வந்த தகவல் இதுதான். 'நான் உங்கள் புத்தகத்தை படித்துக் கொண்டிருக்கிறேன்.' இதற்கு என்ன பதில் எழுதுவது? அடுத்த நாள் இப்படி வந்தது. 'ரொறொன்ரோ பல்கலைக்கழக தமிழ் இருக்கைக்கு எப்படி பணம் அனுப்புவது?' நான் சும்மா பதில் எழுதி வைத்தேன். என்ன ஆச்சரியம் அன்று மாலையே ரொறொன்ரோ பல்கலைக்கழகம் 50 டொலர் வந்ததாக அறிவித்தார்கள்.

ஒருநாள் இந்த மர்மமான மனிதர் தொலைபேசியில் பேசினார். இவர் 17 வயதில் ஈழத்திலிருந்து அகதியாக பாரிசுக்கு வந்து 18 வருடமாக அங்கே வாழ்கிறார். ஈழத்தில் வாழ்ந்த நாட்களிலும் பார்க்க அதிக நாட்களை பாரிசில் கழித்துவிட்டார். ஆனாலும் அவருக்கு பிரெஞ்சு மொழி கொஞ்சம்தான் தெரியும். ஆங்கிலமும் அப்படியே. நல்ல தமிழில் பேசுகிறார். டாக்சி ஓட்டி சம்பாதிக்கிறார். "உங்களுக்கு பெரிதாக பிரெஞ்ச் மொழி தெரியாது, எப்படி சமாளிக்கிறீர்கள்?" "இதிலே என்ன பிரச்சினை? எங்கே போகிறீர்கள்? காசா கிரெடிட் கார்டா? என்று கேட்கத் தெரியவேண்டும். தமிழ்தானே என் மொழி. பிழைப்புக்காக இரண்டு பிரெஞ்சு வார்த்தைகளை பாடமாக்கி வைத்திருக்கிறேன்."

"டாக்சி ஓட்டுவதற்கு உரிமம் பெறுவது கடினம் என்று சொல்கிறார்களே?"

"உண்மைதான். ஒருவருடமாக 2000 யூரோ கட்டிப் படித்த பின்னர் நடந்த பரீட்சையில் பெயிலாகிவிட்டேன்."

"எப்படி?"

"டாக்சி ஓட்டுநருக்கு எல்லா ரோட்டுப் பெயரும் தெரிந்திருக்கவேண்டும். அதிலே சின்னப் பிழை விட்டுவிட்டேன்."

"அடுத்த தடவை சித்தியடைந்தீர்களா?"

"இல்லை, வருமான வரி கேள்வியில் பெயிலாகி விட்டேன்."

"வருமான வரியா? டாக்சி ஓட்டுவதற்கும் வருமான வரிக்கும் என்ன சம்பந்தம்?"

"டாக்சி ஓட்டினால் என் தொழிலுக்கு நானே முதலாளி. ஒரு முதலாளிக்கு எவ்வளவு வருமானத்துக்கு எத்தனை வரி என்ற கணக்கு தெரிந்திருக்க வேண்டும். அடுத்த தடவை வெற்றி பெற்றுவிட்டேன்."

"கொரோனா நாட்களை எப்படி சமாளிக்கிறீர்கள்?"

"மிகவும் மோசம், வாடிக்கையாளர்கள் பாதியாக குறைந்துவிட்டார்கள். ஆனால், செலவு அதிகம். சிரமம்தான்."

"உங்கள் மனைவி வேலை செய்கிறாரா?'

"அதிலே ஒரு பிரச்சினை. என் மகனுக்கு அபூர்வமான வியாதி. அவனுக்கு உணவை விழுங்கத் தெரியாது. நானும் மனைவியும் மாறி மாறி அவனை மருத்துவமனைக்கு கூட்டிச் சென்று தினமும் பயிற்சியளிக்கவேணும்."

"ஓ, அப்படியா? மன்னியுங்கள். கொரோனா சமயம் உங்களுக்கு வருமானம் இல்லை. செலவும்




அதிகம். மகனுடன் மருத்துவமனையில் நேரம் செலவழிக்கவேணும். இந்த சமயத்தில் நீங்கள் தமிழ் இருக்கைக்கு நிதி கொடுக்கவேண்டிய அவசியம் என்ன?"

"அது முக்கியம் ஐயா. தமிழ் இருக்கை அமைவது பெரிய விசயம். மொழிக்காகத்தானே நான் நாட்டைவிட்டு துரத்தப்பட்டேன். எங்கள் மொழிக்கு கிடைக்கும் கௌரவம் எனக்கு கிடைத்தது மாதிரித்தான். கொடையாளர் பட்டியலில் என் பெயரும் இருக்கவேணும்."

தொலைபேசியை வைத்தபின்னர் யோசித்தேன். இந்த அருமையான மனிதருடைய மகன் பெயரை கேட்க மறந்துவிட்டேன். உடனேயே குறுஞ்செய்தி அனுப்பி அவருடைய மகன் பெயர் என்னவென்று கேட்டேன். அது நேற்று. அதிகாலை ஐந்து மணிக்கே கணினியை திறந்து வைத்து அவருடைய பதிலுக்காக காத்திருக்கிறேன். சிலவேளை நாளை வரலாம்.

பத்து ஏக்கர் செல்வந்தர்

பொது வாழ்க்கையில் நிதி சேகரிப்பவர்களுக்கு பல அவமானங்கள் நேர்ந்திருக்கின்றன. ஒரு நகரத்து மக்கள் பொது நீச்சல் குளம் கட்ட தீர்மானித்தார்கள். வீடு வீடாகப் போய் அதற்காக பணம் சேர்த்தார்கள். ஒரு வீட்டில் போய் கதவைத்தட்டி பொது நீச்சல் குளம் கட்ட உதவி தேவை என்று யாசித்தபோது வீட்டுக்காரர் உள்ளே சென்று ஒரு வாளி தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தார். இது மிகையல்ல, அடிக்கடி நடப்பதுதான்.

கனடாவின் அதிசெல்வந்தர்களில் ஒருவரிடம் அவரை சந்திப்பதற்கு நேரம் வாங்கிவிட்டேன். இவர் சிறுவயதில் அகதியாக பெற்றோருடன் கனடாவுக்கு வந்தவர். அந்த வயதில் அவருக்கு தமிழ் அன்றி வேறு ஒரு மொழியும் தெரியாது. அவரை வகுப்பில் சேர்த்தபோது ஆங்கிலம் தெரியாததால் அவராகவே ஆசிரியரிடம் வேண்டி ஒரு வகுப்பு கீழே இறங்கி படிப்பை தொடங்கியவர். ஆரம்ப தடங்கலைத் தாண்டி இங்கேயே படித்து முன்னேறி சொந்தமாக கம்பனி தொடங்கி மிகப் பெரிய செல்வந்தராக குறுகிய காலத்தில் உச்சத்தை அடைந்துவிட்டார்.

அவருடைய வீடு பத்து ஏக்கர் நிலத்தில் அமைந்திருந்தது. கேட்டுக்கு வெளியே நின்று செல்பேசியில் அழைக்க அவர் அங்கிருந்தபடியே கேட்டைத் திறந்துவிட்டார். வாசலிலே உள்ள காலநிலை வேறு, வீட்டின் எல்லையில் உள்ள கால நிலை வேறு. அத்தனை பெரிய வீடு. நாலு பிள்ளைகள். ஒவ்வொருவரும் வீட்டிலே ஒவ்வொரு திசையில் இருந்தபடியால் ஒலிபெருக்கி மூலம் அவர்களுக்கிடையில் உரையாடல்கள் நடந்தன. அவருடைய மனைவி விருந்துக்கு புறப்பட்டவர்போல நீண்ட ஆடையணிந்திருந்தார். தேநீர் கொண்டுவந்தபோது பறவை சிறகடிப்பதுபோல அவருடைய ஆடை மடிந்து மடிந்து விலகியது.

தேநீரை அருந்தியபடியே நான் விசயத்தை சொன்னேன். அவர் அமைதியாக கேட்டார். இடைக்கிடை செல்பெசி அழைப்பு வந்தபோது அதை எடுக்காமல் எல்லாவற்றையும் பொறுமையாகக் கேட்டபின்னர் ஒரேயொரு கேள்வி கேட்டார். "என்னுடைய பிள்ளைகளுக்கு தமிழ் பேசவோ, எழுதவோ தெரியாது. அவர்கள் ஆங்கிலமும் பிரெஞ்சும் படிக்கிறார்கள். ரொறொன்ரோ பல்கலைக்கழகத்தில் தமிழ் இருக்கை அமைவதால் எனக்கோ என் பிள்ளைகளுக்கோ என்ன பிரயோசனம்?"

எனக்கு வாய் அடைத்துவிட்டது. "உங்களுடைய அம்மா உங்களை குழந்தையாக மடியில் கிடத்தி என்ன மொழியில் பேசினார்?" என்று கேட்டேன். அவர்

தமிழ் என்றார். நான் வேறு ஒன்றுமே பேசவில்லை. விடைபெற்றுக்கொண்டு வெளியேறினேன்.

தாம்பூலப் பை

எனக்கு சாக்குத் துணியில் செய்த தாம்பூலப் பை ஒன்று கும்பகோணத்திலுள்ள சின்னக் கிராமம் ஒன்றிலிருந்து வந்தது. பிரித்துப் பார்த்த நான் ஆச்சரியப்பட்டேன். அதில் இப்படி அச்சடித்திருந்தது. 'தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்கு கற்றனைத் தூறும் அறிவு. Tamil Chair Inc. University of Toronto, Canada.'

ரொறொன்ரோ பல்கலைக்கழக தமிழ் இருக்கைக்கும் தாம்பூலப் பையுக்கும் என்ன சம்பந்தம்? அதை அனுப்பியவரையே அழைத்துக் கேட்டேன். அவர் சொன்னார். "வேறு ஒன்றுமில்லை, விளம்பரம்தான். கல்யாண வீட்டுக்கு வந்த ஒவ்வொருவருக்கும் பை வழங்கப்பட்டது. அவர் வாசகத்தை பார்ப்பார். அந்தப் பை வேறு ஒருவர் கையுக்கு போகும். அவரும் வாசகத்தை பார்ப்பார். இப்படி இந்தச் செய்தியை பத்தாயிரம் பேராவது படிப்பார்கள்' என்றார். அத்துடன் அந்த அன்பர் நிற்கவில்லை. ஒருவாரம் கழித்து மிகப் பெரிய தொகை ஒன்றை தமிழ் இருக்கைக்கு நன்கொடையாக அனுப்பினார்.

அன்பரின் வீடு ரொறொன்ரோவிலிருந்து 13,000 கி.மீட்டர் தூரத்தில் ஒரு சின்னக் கிராமத்தில் இருந்தது. இவர்கள் ரொறொன்ரோ பல்கலைக்கழகத்தை பார்த்ததில்லை. அங்கே இவருடைய சொந்தக்காரர் யாராவது படித்ததும் கிடையாது. இந்த நன்கொடையால் பெரிய புகழ் ஒன்றும் இவருக்கு கிடைக்கப் போவதில்லை. இவருக்கும் ரொறொன்ரோ தமிழ் இருக்கைக்கும் என்ன தொடர்பு? ஒன்றுமே இல்லை, தமிழ் என்னும் மொழி தான். இந்த நன்கொடையால் அவருக்கு என்ன பிரயோசனம்? பத்து ஏக்கர் வீட்டுக்காரருக்கு இதுதான் பதில் என்று தோன்றியது.

இளம் எழுத்தாளர்

நிதி சேகரிப்பு, வெற்றி தோல்விகள் நிறைந்தது. முன்பின் தெரியாத ஓர் இளம் எழுத்தாளர் தன்னுடைய புத்தகம் ஒன்றுக்கு முன்னுரை கேட்டிருந்தார். முன்னுரை எழுதச் சொல்லி யார் கேட்டாலும் எனக்கு நடுக்கம் பிடித்துவிடும். ஏன் என்றால் ஒரு முன்னுரை எழுதும் நேரத்தில் நான் மூன்று கட்டுரைகள் எழுதிவிடுவேன். அத்துடன் ரொறொன்ரோ பல்கலைக்கழக தமிழ் இருக்கைக்கு நிது சேர்ப்பதில் நான் ஒவ்வொரு நிமிடத்தையும் செலவழித்தேன். ஆகவே, சில மணி நேரத்தை திருடித்தான் முன்னுரை எழுதவேண்டும். நான் எழுத்தாளரிடம் இப்படிச் சொன்னேன். "எப்படியும் நேரம் சம்பாதித்து முன்னுரை எழுதிவிடுகிறேன். நீங்கள் ஓர் உதவி செய்ய முடியுமா?"

"சொல்லுங்கள், ஐயா காத்திருக்கிறேன்."

"உங்கள் எழுத்திலிருந்து நீங்கள் தமிழ் பற்றாளர் என்பது தெரிகிறது. ரொறொன்ரோ தமிழ் இருக்கைக்கு உங்கள் உறவினர்களிடமிருந்தும் நண்பர்களிடமிருந்தும் ஆதரவு திரட்டமுடியுமா? எத்தனை சிறு நன்கொடை என்றாலும் பரவாயில்லை. அதை நேரே பல்கலைக்கழக வங்கிக் கணக்குக்கு அனுப்பிவிடுங்கள்" என்றேன்.

மிக்க மகிழ்ச்சியுடன் "செய்கிறேன், செய்கிறேன்" என்று உறுதியளித்தார்.

வாக்குக்கொடுத்தபடியே எழுத்தாளரின் புத்தகத்தை இருதரம் வாசித்து குறிப்புகள் எடுத்து முன்னுரை எழுதினேன். நாலு தடவை திருத்தங்கள் செய்தேன். முன்னுரை திருப்தியாக அமைந்ததும் எழுத்தாளருக்கு அனுப்பிவைத்தேன். அவரும் நன்றாக இருக்கிறது என்று பாராட்டினார். அது மூன்று மாதங்களுக்கு முன்பு. பின்னர் புத்தகம் வெளிவந்துவிட்டதாக கேள்விப்பட்டேன். என்னுடைய முன்னுரையினால் ஒரு பிரதிகூட அதிகமாக விற்காது என்பது எனக்குத் தெரியும்; ஒன்றிரண்டு குறைவாகக்கூட விற்றிருக்கலாம். எனக்கு ஒரு பிரதி அனுப்புவார் என எதிர்பார்த்தேன். கிடைக்கவில்லை. ஒவ்வொரு வாரமும் பல்கலைக்கழகத்தை அழைத்து இன்னார் பணம் அனுப்பினாரா என்று கேட்பேன். அவர்கள் இல்லை என்பார்கள். அது ஆறுமாதம் முன்னர். இப்பொழுது கேட்பதை நிறுத்திவிட்டேன்.

சந்தைப்படுத்தல்

ஒருநாள் தமிழ் இருக்கைக்கான telemarketing ரொறொன்ரோ பல்கலைக்கழக வளாகத்தில் நடந்தது. 25 பல்கலைக்கழக மாணவ மாணவிகள் தொலைபேசி முன் அமர்ந்து ரொறொன்ரோ பல்கலைக்கழகத்தில் ஏற்கனவே படித்த பழைய மாணவ மாணவியரை அழைத்து தமிழ் இருக்கைக்கு நன்கொடை யாசித்தனர். பணியில் அமர்ந்த எல்லோருமே வேறு வேறு மொழி பேசும் தன்னார்வத் தொண்டர்கள். தமிழ் இருக்கை பற்றி அவர்களுக்கு அறிமுகம் செய்வதற்காக நான் அங்கே சென்றிருந்தேன். அவர்கள் பேசாத ஒரு மொழிக்காக அவர்கள் அப்படி உளமார உழைத்தது என்னை நெகிழவைத்தது. அன்று அவர்கள் 53 பழைய மாணவ மாணவியரிடம் உரையாடி ஏறக்குறைய 3000 டொலர்கள் திரட்டியிருந்தனர். ஒரு யப்பானிய மாணவியிடம், "ஏன் இந்த தொண்டு வேலையை செய்கிறீர்?" என்று கேட்டேன். அவர் சொன்னார், "2500 வருடங்களாக வாழும் ஒரு மொழிக்கு இருக்கை அமைந்தால் அது பல்கலைக்கழகத்துக்கு பெருமையல்லவா?" அந்த நொடியில் என் கண்களை அவர் திறந்துவிட்டார். அதுவரைக்கும் நான் தமிழ் இருக்கை அமைவதால் தமிழுக்குத்தான் பெருமை என நினைத்திருந்தேன்.

காலைத் தொடுவேன்

தமிழ் இருக்கைக்கு இணையம் வழியாக பணம் அனுப்புபவர்களின் எண்ணிக்கை சிறிது சிறிதாக அதிகரித்தது. ஒரு முறை பணம் அனுப்பியவர்களின் பட்டியலைப் பார்த்தபோது முன்பின் தெரியாத ஒருவர் 50 டொலர் அனுப்பியிருந்தார். ஏதோ உந்துதலில் அவரை தொலைபேசியில் அழைத்து பேச்சு கொடுத்தபோது அவர் தன் அனுபவத்தை சொன்னார். தொழில்நுட்பக் கோளாறினால் பலதடவை முயற்சி செய்தும் பணம் அனுப்ப முடியவில்லை. இறுதியில் விரக்தி மேலிட ரொறொன்ரோ பல்கலைக்கழகத்தை நேரிலே அழைத்து



பிரச்சினையை சொன்னார். அவர்கள் வழிகாட்ட, இவர் ஒருவாறு 50 டொலர் காசை கடனட்டை மூலம் செலுத்திவிட்டார்.

இத்தனைக்கும் எங்கள் உரையாடல் ஆங்கிலத்திலேயே நடந்தது. அவருடைய பெயர் ஆனந்த் மன்னா என்று இருந்ததால் என் சந்தேகத்தை கேட்டேன். "நீங்கள் தமிழரா?" அவர், "இல்லை, நான் தெலுங்கு மொழி பேசுபவன்" என்றார்.

"நீங்கள் தமிழ் பேசுவீர்களா?"

அவர் தனக்கு தமிழ் பேசவோ, எழுதவோ, படிக்கவோ தெரியாது என்றார். ஆச்சரியமாயிருந்தது. "எதற்காக தமிழ் இருக்கைக்கு இரண்டு நாட்கள் விடாப்பிடியாக முயன்று பணம் கட்டினீர்கள்?"

அவர் சொன்னார், "தமிழ் மிகப் பழமையானது. இந்திய மொழிகளில் அரிய இலக்கியங்களைக் கொண்டது. தமிழுக்கு ஓர் இருக்கை அமைந்தால் அது எங்கள் எல்லோருக்கும் பெருமைதானே."

என்னால் நம்ப முடியவில்லை. உணர்ச்சி பெருகி என் குரல் தழுதழுத்தது. நான், "அன்பரே, உங்களை எங்காவது வழியில் சந்தித்தால் நான் உங்கள் காலைத் தொடுவேன்" என்றேன். அவர் பதில் பேசாது அமைதியாக டெலிபோனை வைத்தார்.

வோல்வோ கார்

கனடாவில் மிகவும் பிரபலமான வீடு விற்பனை முகவர் ஒருவரை அணுகினேன். மாதம் தோறும் அவர் பல மில்லியன்கள் பெறுமதியான வீடுகளை விற்றுக்கொடுப்பார்; அல்லது வாங்கிக் கொடுப்பார். ரொறொன்ரோ தமிழ் இருக்கைக்கு நன்கொடை என்று சொன்னவுடன் அவர் ஆரம்பித்தார். "என்னுடைய மகனுக்கு மேற்படிப்புக்கு இடம் கிடைத்திருக்கிறது. அதற்கு 10,000 டொலர் தேவைப்படுகிறது. வன்னியில் என் அம்மாவுக்கு முதுகில் அறுவை சிகிச்சை செய்வதற்கு பணம் அனுப்பவேண்டும். நேற்று எங்கள் ஊர் கோயில் கும்பாபிசேகத்தை முன்னின்று நடத்தியதில் எனக்கு பெரும் செலவு" என்றார். போன மாதம் வாங்கிய வொல்வோ சி 90 கார் பற்றி அவர் மூச்சு விடவே இல்லை.

நான் கற்றுக்கொண்டது இதுதான். ஒருவருடைய நிதி நிலைமை பற்றி தெரிய வேண்டுமானால் அவரிடம் ரொறொன்ரோ தமிழ் இருக்கைக்கு நன்கொடை கேட்கவேண்டும்.

விசுவாசமான வாசகர்

எனக்கு ஒரு விசுவாசமான வாசகர் இருந்தார். ஒரு மாதத்தில் ஒரு முறையாவது அழைப்பார். என்னுடைய தீவிரமான வாசகர். நான் எழுதிய எல்லா புத்தகங்களையும் படித்திருக்கிறார். பேசும்போது என்னுடைய சிறுகதையிலிருந்து ஒரு வசனத்தை எடுத்து அப்படியே போகிறபோக்கில் வீசிவிடுவார். அவர் எப்ப அழைத்தாலும் உரையாடல் ஒரு மணி நேரம் நீளும். கடைசியில் நான்தான் ஏதாவது சாட்டுச் சொல்லி உரையாடலை முடிவுக்கு கொண்டு வரவேண்டும். ஆனால், ஆச்சரியம் என்னவென்றால் அடுத்த தடவை அழைக்கும்போது ஏதாவது புது விசயத்தை எடுத்து வருவார். ஒருமுறை பேசியதை மீண்டும் பேசுவதே கிடையாது. இத்தனைக்கும் அவருடைய முகத்தை நான் பார்த்ததில்லை.



ஒருநாள் ஓர் அதிசயம் நடந்தது. நான் ஒரு பல்கடை அங்காடியில் நின்றபோது ஒருவர் வந்து கைகொடுத்து என்னை தெரிந்தது போலப் பேசினார். பார்த்தால் அவர்தான் அந்த வாசகர். தோளிலே மாட்டியிருந்த பையை எடுத்து காட்டினார். அதற்குள்ளே நான் எழுதியக கதைகள் பல ஒளிநகல்களாக காட்சியளித்தன. "இதை ஏன் இப்படி காவித் திரிகிறீர்கள்" எனக் கேட்டேன். அவர் அப்போது சொன்ன பதில்தான் என் வாழ்நாளில் நான் என்றுமே மறக்க முடியாத ஒன்றாக அமைந்தது. "எப்பவாவது உங்களைச் சந்திக்கலாம் என்று இவற்றை சுமந்து திரிவேன்" என்றார்.

"ஒவ்வொரு நாளுமா?"

"ஆமாம் எங்கே புறப்பட்டாலும் பையை எடுத்துத்தான் செல்வேன்."

அந்த சந்திப்புக்கு பின்னரும் அவருடைய அழைப்பு தொடர்ந்தது. நீண்ட நேர உரையாடலுக்குப் பின்னர் நான் பேச்சை ஒரு முடிவுக்கு கொண்டு வருவேன். அவர் ஒரு தொழில்சாலையில் வேலை செய்தார். மணித்தியாலத்துக்கு இவ்வளவு என்ற சம்பளத்தில் ரொட்டியை பிளாஸ்டிக் உறையில் அடைக்கும் வேலை. நாளுக்கு ஒன்பது, பத்து மணித்தியாலம் வேலை செய்வார். வாரத்துக்கு ஆறு நாட்கள். சிலவேளை ஏழாவது நாளும் வேலை செய்வதுண்டு. அன்று மணித்தியாலத்துக்கு அதிகமான தொகை கிடைக்கும்.

ஒருநாள் இவர் என்னை வழக்கம்போல அழைத்த போது நான் ரொறொன்ரோ பல்கலைக்கழகத்தில் ஓர் இருக்கை அமைய இருப்பதைப் பற்றி சொன்னேன். "உங்களால் முடிந்ததை, 25 டொலரோ அல்லது 50 டொலரோ நன்கொடை வழங்கினால் பெரிய உதவியாயிருக்கும். உங்கள் பெயர் கொடையாளர்களின் பட்டியலில் நிரந்தரமாக பதிவாகிவிடும்" என்று கூறினேன். "ஐயா, லைன் ஒன்று வருகுது" என்றுவிட்டு அவசரமாக டெலிபோனை துண்டித்தார். இது நடந்து ஆறு மாதம் ஆகிறது. அதன் பின்னர் அவர் என்னை அழைக்கவே இல்லை.

அவசர டொக்ரர்

"டொக்ரர் முத்துலிங்கத்துடன் பேசமுடியுமா?"

"அப்படி ஒருவரும் இல்லையே."

"கலாநிதி முத்துலிங்கம்?"

"அவரும் இல்லை."

"முனைவர் முத்துலிங்கம்."

"இல்லையே."

"இந்த நம்பரில் அவர் இருக்கிறார் என்று சொன்னார்கள். நான் அவருடன்தான் பேசவேண்டும். அவர் ஒரு பேராசிரியராகக்கூட இருக்கலாம். அவசரமான விசயம்."

"அப்படியா? என்ன விசயம் என்று சொல்ல முடியுமா?"

"அது ஒன்றும் ரகஸ்யமில்லை. ரொறொன்ரோ தமிழ் இருக்கைக்கு நன்கொடை வழங்கவேண்டும் என்று என்னுடைய husband சொன்னார். டொக்ரர் இதற்கான ஏற்பாடு செயவார் என்றார். அதுதான் அவரை தேடிக் கண்டுபிடிக்கவேண்டும்."

நான் உசாரானேன்.

"நீங்கள் எவ்வளவு நன்கொடை கொடுக்க திட்டம் போட்டிருக்கிறீர்கள்?"

"என்னுடைய husband 50,000 டொலர் என்று சொன்னார்."

நான் நிலத்திலே விழுந்து புரளத் தயாரானேன். "எனக்கு எல்லா விவரங்களும் தெரியும். நானே அவற்றை தருகிறேன்."

"அது கூடாது. என் husbandடின் கட்டளை டொக்ரர் முத்துலிங்கத்துடன் பேசவேண்டும் என்பதுதான்."

"பட்டத்தில் என்ன இருக்கிறது? நானே இந்த நன்கொடையை ஏற்று முறையாகப் பதிவு செய்வேன். பல்கலைக் கழகத்திலிருந்து உடனேயே உங்கள் கைக்கு ரசீது வந்து சேரும்."

"அது ஏலாது. டொக்ரர் பட்டம் உள்ளவரிடம் பேசவேண்டும் என்பதுதான் கடுமையான கட்டளை."

இது என்ன கட்டளை? காரைக்கால் அம்மையார் வியக்கும் வண்ணம் நாலு கட்டளைக் கலித்துறை பாடல்களை இடது கையால் எழுதினாலும் எழுதலாம். இந்த அம்மையாரை தகர்க்க முடியாது போலிருக்கிறதே. டொக்ரர் பட்டம் எடுப்பது சாமான்ய காரியம் இல்லை. இனி ஒருவர் படித்து எடுப்பதும் முடியாது.

"அம்மையே, டொக்ரர் பட்டத்துக்கு எவ்வளவு கழிக்க வேண்டுமோ அதைக் கழித்துக்கொண்டு மீதியை தாருங்கள். உடனேயே ரசீது அனுப்ப ஏற்பாடு செய்வேன்."

"நோ நோ, அப்படி எல்லாம் செய்யமுடியாது. ஏதோ என்னால் முடிந்ததை செய்யலாம் என்று நினைக்கிறேன். இது என்ன? விடாப்பிடியாக இருக்கிறீர்கள். நீங்கள் யார்?"

"சும்மா முத்துலிங்கம்."

"அ. முத்துலிங்கம்" <amuttu@gmail.com>



# மாலையின் ஓசைகள்

**வைதீஸ்வரன்**

1
சூரியன்
நகர்த்தும் கிழக்கு நிழல்
இலைகள்
சாய்க்கும் மேற்குக் காற்று
திசைகள் தெளிந்தன
பறவையின் பாய்ச்சல்

2
நிலத்தில் ஒரு தடி
விதியென நடக்கிறது
முதுமையை வீடுவரை
இழுத்துக் கொண்டு.

3
நீல வானமெங்கும்
துளித் துளி இரவுகள்
கூடு திரும்புது காகங்கள்

4
பறவைகளின் கோலாகலம்
வானமெங்கும்
மரங்களில் தொங்கும் மிச்சப் பழங்கள்

**வைதீஸ்வரன்** <vydheesw@yahoo.com>

நேர்காணல்

# நாவலாசிரியன் இருத்தலை விசாரணைக்கு உள்ளாக்குபவன்

மிலன் குந்தேரா தமிழில்: ராம் முரளி

நம் காலத்தின் மகத்தான படைப்பிலக்கிய வாதிகளில் ஒருவர் மிலன் குந்தேரா. பத்து நாவல்கள், ஒரு சிறுகதைத் தொகுப்பு, கவிதைகள், கட்டுரைகள் என இவரது இலக்கிய உலக பங்களிப்பு பரந்து விரிந்தது. எனினும் நாவல் எழுத்தையே பெரும்பாலும் தமக்குரிய கலை வெளிப்பாட்டுத் தேர்வாக கொண்டிருக்கிறார். இலக்கியத்தின் ஒரு அங்கம் என்றில்லாமல், நாவல் எழுத்தே தனியொரு கலை என்பது இவரது கருத்து. தற்போது 90 வயதைக் கடந்துவிட்ட நிலையில், அவரது படைப்புள் வெளிவருவது தோய்ந்துவிட்டது. 2014ஆம் வருடத்தில் வெளியான 'The festival of insignificance' என்பதே கடைசியாக வெளிவந்த இவரது நாவலாகும்.

செக் குடியரசின் புரூனோ நகரில் 1929இல் பிறந்தவர் என்றாலும் 1975இல் இருந்து பிரான்ஸிலேயே வாழ்ந்து வருகிறார். 1993க்கு பிறகு, பிரெஞ்சு மொழியிலேயே தமது புனைவெழுத்துக்களை எழுதி வருகிறார். இளம் பருவத்தில் கம்யூனிச இயக்கத்தில் தீவிரமாக செயல்பட்டார். ஆனால்,செக் குடியரசின் மீதான ரஷ்ய ஆக்கிரமிப்பை தொடர்ந்து, அவ்வியக்கத்துடனான தமது உறவுகளை முறித்துக்கொண்டார். விளைவாக, இவரது படைப்புகள் செக் குடியரசில் தடை செய்யப்பட்டன; குடியுரிமையும் ரத்து செய்யப்பட்டது. இதன் தொடர்ச்சியாகவே, பிரான்ஸுக்கான இவரது இடப்பெயர்வு நிகழ்ந்தது.

பலமுறை நோபல் பரிசுக்கான பரிந்துரைகளில் இவரது பெயர் பரிசீலனை செய்யப்பட்டிருக்கிறது என்றொரு வழக்குப் புழக்கத்தில் இருக்கிறது. எனினும் தமது நிலைப்பாடுகள், செக் குடியரசில் இருந்து வெளியேறியது, சோஷியலிஸ அரசுடனான அவரது சிக்கல் மிகுந்த உறவு போன்றவற்றால், குந்தேராவுக்கு நோபல் பரிசு கிடைப்பது சாத்தியமில்லை என்றே கருதப்படுகிறது.



தமது படைப்புகளை பிரெஞ்சு இலக்கியத்தின் அங்கமாகவும் தம்மை ஒரு பிரான்ஸ் தேசத்து எழுத்தாளராகவுமே எப்போதும் வகைப்படுத்தவேண்டும் என்பதே அவரது கருத்தாகும். பொதுவாக, தனது தனிப்பட்ட வாழ்க்கை சார்ந்த தகவல்களை வெளியிடுவதை விரும்பாதவர். புகழினால் போதையாவது, தொலைக்காட்சி நேர்காணல்களில் ஒப்பனை செய்யப்படும் முகத்தை காண்பிப்பது எல்லாம் எழுத்தாளர்களுக்கு உரியது அல்ல என்பதே அவரது எண்ணமாகும்.

தனிக்கென தனித்துவமான நாவல் எழுத்து பாணியை உருவாக்கி வைத்துள்ள மிலன் குந்தேரா, தமது படைப்புகளில் இருத்தலியல் குழப்பங்களையும் பாலியல் தூண்டுதலையும் சர்வாதிகாரத்திற்கு எதிராக தனி மனித கவனப்படுத்துதலையும் வரலாற்று மேடையில் செய்யப்படும் ஒரு அரங்கத்தைப்போல நிகழ்த்திச் செல்கிறார்.

மிலன் குந்தேராவின் நாவல் கலை பற்றிய கட்டுரையை முன்வைத்து, 1987ம் வருடத்தில் கிரிஸ்டியன் சால்மோனால் மேற்கொள்ளப்பட்ட நேர்காணலின் தமிழாக்கமே இது.

**நம்முடைய இந்த நேர்காணலை, உங்களது நாவல்களின் அழகியல் கூறுகளுக்கு அர்ப்பணிப்பு செய்யலாம் என்றிருக்கிறேன். ஆனால், நாம் எங்கிருந்து தொடங்குவது?**

இந்த வலியுறுத்தலோடு துவங்கலாம்: என்னுடைய நாவல்கள் உளவியல் ரீதியிலானவை அல்ல. இன்னும் தெளிவுற விளக்குவதென்றால், பொதுவாக, உளவியல் கூறுகள் என்று வகைப்படுத்தப்படும் நாவலின் அழகியலுக்கு வெளியிலேயே அவை மையம் கொண்டுள்ளன.

**ஆனால், அனைத்து நாவல்களுமே உளவியல் தன்மைகளை கொண்டிருக்கும் அல்லவா? அதாவது, ஆன்மாவின் புதிர் தன்மை மீது அக்கறை கொண்டிருக்கும் அல்லவா?**

நாம் தெளிவாக உரையாடலாம். அனைத்து நாவல்களும் அதாவது, அனைத்து காலகட்டத்தைச் சேர்ந்த நாவல்களும் தமக்குள் உறைந்திருக்கும் புதிர் தன்மையின் மீதுதான் அக்கறை கொண்டிருக்கும். கற்பனையான ஒரு உயிரியை, அதாவது கதாபாத்திரத்தை நீங்கள் உருவாக்கியதும் வெகு இயல்பாக உங்கள் முன் எழுகின்ற கேள்வி, சுயம் என்றால் என்ன?, சுயத்தை எப்படி கைப்பற்றுவது? என்பதாகவே இருக்கும். அடிப்படையான கேள்விகளில் ஒன்றான இதில்தான் நாவல், நாவலாக இருப்பது அடங்கியிருக்கிறது.

உங்களுக்கு தேவையென்றால், இந்த கேள்விக்கு கிடைத்திருக்கக்கூடிய வெவ்வேறு விதமான பதில்களை தொகுத்து, நாவல் வரலாற்றின் வெவ்வேறு விதமான போக்குகளை வகைப்படுத்த முடியும். அதோடு, நாவல் வரலாற்றின் ஒவ்வொரு காலகட்டத்திலும் இப்போக்குகள் எவ்வாறு இருந்தன என்பதையும் அனுமானிக்க முடியும். உளவியல் ரீதியிலான அணுகுமுறை என்பதை ஐரோப்பாவின் முதலாவது கதைச் சொல்லிகள் அறிந்திருக்கக்கூட இல்லை. பொக்காச்சியோ (Boccaccio) வெறுமனே சாகசங்களையும் செயல்களையும் மட்டும்தான் சொல்கிறார். எனினும் இத்தகைய நகைப்புக்குரிய கதைகளில் இருந்துகூட நம்மால் ஒருவிதமான தெளிவைப் பெற முடியும்: அதாவது செயல்களின் மூலமாகவே ஒரு மனிதன் தான்போன்றே பிரதிபலிக்கும் பிற மனிதர்களை எதிர்கொள்ள நேரிடுகின்ற தினசரி தன்மையிலான வாழ்க்கையில் இருந்து வெளியேற முடியும். செயல்களின் மூலமாக, பிறமனிதர்களிடத்தில் இருந்து தம்மை வேறுபடுத்திக்கொள்ளவும் முடியும். இச்செயல்களின் வாயிலாகவே அவன் தனித்ததொரு உயிராக மாறுகிறான்.

தாந்தேவும் (Dante) சொல்லியிருக்கிறார், 'எந்தவொரு செயலிலும் செயல் புரிகின்றவனின் முதன்மையான நோக்கமென்பது தன்னுடைய சுய பிம்பத்தை வெளிப்படுத்துவதற்கான விழைவுதான்'. ஆகத் தொடக்கத்திலேயே, செயல் என்பது செயல்புரிகின்றவனின் சுய உருவச் சித்திரம்தான் என்பது கண்கூடு.

பொக்காச்சியோவுக்கு பின்னர் நான்கு நூற்றாண்டுகள் கழித்து, டிடிராட் (Diderot) எளிதில் திருப்தியுறாதவராகவும் சந்தேகம் கொள்கிறவராகவும் இருக்கிறார். அவருடைய பாத்திர வார்ப்பான ஜாக்குவஸ் லெ பெடலிஸ்டே தனது நண்பனின் காதலிக்கு பாலியல் விழைவைத் தூண்டுகிறான், மகிழ்ச்சிகரமாக மது அருந்துகிறான், அவனது தந்தை அவனுக்கு எதிராக நிற்கிறார். அதனால், போரில் பங்கேற்பதற்கான ஒரு பத்திரம் அவனிடத்தில் வருகின்றபோது, விருப்பமேயில்லை என்றாலும் அதில் கையொப்பமிடுகிறான். அதன்பிறகு, முதல் சண்டையிலேயே அவனது முழங்காலை ஒரு தோட்டா துளைத்துவிடுகிறது. அவன் தனது வாழ்வின் இறுதி தினம் வரையிலும் நொண்டியபடியே நாட்களைக் கடத்துகிறான். தான், பல எல்லைகளைக் கொண்ட சாகச உலகத்திற்குள் நுழைவதாகக் கற்பனை செய்துகொள்ளும் அவன், இறுதியில், தனது சவக்குழியைத் தானே தோண்டிக்கொள்ளும் துர்ப்பாக்கிய நிலையை அடைகிறான். அவனது செயல்களின் மூலமாக, அவனால் தன்னை அடையாளப்படுத்திக்கொள்ள முடியாது. அவனுக்கும் அவனது செயல்களுக்கும் இடையில் பெரும் விரிசல் விழுந்திருக்கிறது. தனது சுயத்தை வெளிப்படுத்தும் விழைவில் அவன் இருக்கிறான் என்றாலும் அவனது செயல்களின் மூலமாக வெளிப்படும் பிம்பம் துளியும் அவனை ஒத்ததாக இருப்பதில்லை.

செயல்களின் முரணியக்க விதி என்பது நாவல் கலை பற்றிய மகத்தான கண்டுபிடிப்புகளில் ஒன்று. ஆனால், தனது செயல்களின் மூலமாக ஒருவனால் தனது சுயத்தைக் கைப்பற்ற முடியவில்லை என்றால், பின் அவன் எப்படி, எப்போது தனது சுயத்தை அடையாளங் காண முடியும்? அதனால்தான், நாவல் தன்னளவில் அதன் சுயத்தைப் பற்றிய விசாரணை மேற்கொள்ள வேண்டிய காலம் வந்தது. அதனால், யதார்த்த உலகின் செயல்கள், அசைவுகள் என்பனவற்றைப் புறந்தள்ளி, கண்ணுக்குப் புலனாகாத அதன் உள்ளார்ந்த உயிர்ப்புத்தன்மைப் பற்றிய விசாரணையை மேற்கொள்ள வேண்டிய அவசியம் எழுந்தது. பதினெட்டாம் நூற்றாண்டின் மத்திய காலத்தில்தான் கதாபாத்திரங்கள் தங்களது சுய சிந்தனைகளையும் உணர்வுகளையும் வெளிப்படையாக பகிர்ந்துகொள்ளும் எபிஸ்டோலரி (Epistolary) நாவல் வடிவத்தை ரிச்சர்ட்சன் கண்டுபிடித்தார்.

அப்படியெனில், உளவியல் ரீதியிலான அணுகுமுறை கொண்ட நாவல்கள் எப்போது பிறந்தன?

இந்த குறியீடே துல்லியமற்றதும் தோராயமானது மாகவும் இருக்கிறது. அதனால், நாம் அதனைத் தவிர்த்துவிட்டு, பொழிப்புரையை பயன்படுத்தலாம்: ரிச்சர்ட்சன் தனது நாவலில் மனிதனின் உள்ளார்ந்த வாழ்க்கையை ஆராயும் முயற்சியைத் தொடங்கியிருந்தார். அவருக்கு பின்தோன்றிய பெரு வெற்றியாளர்களை நாம் அறிவோம். வெர்தரின் 'கதே'வில் தொடர்ச்சியாக இருந்தது, அதன்பிறகு ஸ்டெந்தால் மற்றும் அவருடைய நூற்றாண்டைச் சேர்ந்த ஏனைய எழுத்தாளர்கள். அந்த பரிணாம வளர்ச்சியின் காலகட்டத்தில் எழுந்த பெரும் பெரும் எழுச்சிகள், என்னளவில், புரோஸ்டின் (Proust) படைப்புகளிலும் ஜாய்ஸின் படைப்புகளிலும்தான் இருந்தன.

புரோஸ்ட்டின் 'Lost Time'-ஐ விடவும் கைப்பற்ற முடியாத ஏதோவொன்றை ஜாய்ஸ் ஆராய்ந்து கொண்டிருந்தார். அது தக்கண அசைவியக்கம். தற்கால அசைவியக்கத்தைப்போல தெளிவானதும் உறுதியானதும் அதோடு வெளிப்படையானதும் வேறு என்ன இருக்க முடியும். அது நம்மை முழுமையாகவே தவிர்த்துவிடுகிறது. வாழ்க்கையின் அத்தனை துயரமும் அந்த ஒற்றை காரணியில்தான் நிலைப்பெற்றிருக்கிறது. ஒவ்வொரு தனித்தனி நொடிகளிலும் நமது பார்வை, செவிப்புலன், வாசனை நுகர்வு (தெரிந்தோ அல்லது தெரியாமலோ), நிகழ்வுகளின் சங்கமம் அதோடு நமது தலைகளின் வழியே ஓராயிரம் சிந்தனைகளும் உணர்வுகளும் கடந்து சென்றபடியே இருக்கின்றன. ஒவ்வொரு கணமும் ஒரு சிறிய பிரபஞ்சத்தையே பிரதிநிதித்துவப்படுத்துகிறது. அதோடு தவிர்க்க முடியாமல் இவையெல்லாம் அடுத்த கணத்திலேயே மறக்கப்படுகின்றன. இப்போது ஜாய்ஸின் நுண்ணோக்கிய எழுத்து, ஒவ்வொரு கணத்தையும் நிறுத்தி, அந்த விரைவான நகர்வுகளைக் கைப்பற்றி நம்மைக் காணும்படி செய்கிறது. ஆனால், சுயம் பற்றிய விசாரணை மீண்டும் ஒரு முரண்பாட்டுடனேயே முடிந்துவிடுகிறது. எத்தனை ஆற்றலுடன் நுண்ணோக்கி சுயத்தை அவதானிக்கத் தலைப்படுகிறதோ, அதே அளவிலான ஆற்றலுடன் மீண்டும் சுயமும் அதன் தனித்தன்மையும் நம்மிடம் இருந்து தப்பித்துவிடுகிறது.

ஆன்மாவைத் துகள் துகளாக, அணுக்களாகப் பிளக்கும் ஜாய்ஸின் நுண்ணோக்கியின் அடியாழத்தில்

நாம் எல்லோரும் தனித்துவமற்று ஒற்றை உயிரைப்போலவே இருக்கிறோம். ஆனால், ஒருவேளை சுயமும் அதனது தனித்துவமும் மனிதனின் அக வாழ்க்கையில் கண்டுணர முடியவில்லை என்றால், பிறகு எங்கு எப்படி நாம் அதனை கைக்கொள்ள முடியும்?

*அதனைக் கைப்பற்ற முடியுமா?*

நிச்சயமாக முடியாது. சுயத்தை பற்றிய விசாரணை என்பது முரண்பாடாகத் திருப்தியின்மையிலேயே முடிவடைந்திருக்கிறது. எப்போதும் அவ்வாறுதான் முடிவடையும். அதனை தோல்வி என்று சொல்லமாட்டேன். நாவல் தனது சாத்தியங்களின் எல்லைகளை மீற முடியவியலாதபோது, அதோடு - அந்த எல்லைகளை வெளிச்சத்திற்குக் கொண்டு வந்து நிறுத்துவது - என்பதே மகத்தான கண்டுபிடிப்புதான். அறிவு வெளிப்பாட்டின் மகத்தான வெற்றி என்றே இதனைக் கருத வேண்டும். இருப்பினும் சுயத்தின் உள்ளார்ந்த வாழ்க்கையை ஆராயும் தீவிர முனைப்புகளில் கூடுமானவரையில் ஆழத்தைக் கண்டடைந்துவிட்டதற்குப் பிறகு, மிகச் சிறந்த நாவலாசிரியர்கள் அறிந்தோ அல்லது நனவிலி மனதுடனோ புதியதொரு நோக்கு நிலையை ஆராயத் தொடங்கிவிடுவார்கள்.

நவீன நாவல் கலையின் புனித மும்மூர்த்திகளைப் பற்றி அவ்வப்போது கேள்விப்பட்டே வருகிறோம்: புரோஸ்ட், ஜாய்ஸ், காஃப்கா. எனினும் எனது சொந்த பார்வையினடிப்படையிலான நாவல் வரலாற்றில், காஃப்கா தான் இந்த புதிய நோக்கு நிலையை வழங்கியவர். அதாவது புரோஸ்டியனுக்கு பிந்தியதொரு நோக்கு நிலையை அவர்தான் வழங்கினார். அவருடைய பாணியிலான சுய சித்திரிப்பு என்பது முற்றிலும் எதிர்பார்க்கவியலாதது. கே-வை தனித்துவமான உயிரியாக எதன் அடிப்படையில் வரையறுப்பது? அவனது உருத் தோற்றத்தின் மூலமாகவா? (ஆனால், நமக்கு அது பற்றி ஒன்றுமே தெரியாது). அவனது வரலாற்றின் மூலமாகவா? (அதுவும் நமக்குச் சொல்லப்படுவதில்லை). அவருடைய பெயரின் மூலமாகவா? (அவனுக்கென்று ஒரு பெயர் இல்லை). அவனுடைய நினைவுகளின் மூலமாகவா? அவனது அனுமானங்களின் மூலமாகவா? அவனுடைய சிக்கல் தன்மைகளின் மூலமாகவா? அல்லது அவனது நடவடிக்கை மூலமாகவா? அவனுடைய செயல் என்பதுகூட புலம்பல்கள் எனும் நிலையிலேயே வரையறை செய்யப்பட்டிருக்கிறது. அவனுடைய சிந்தனைகளின் மூலமாகவா? ஆமாம். காஃப்கா இடைவிடாமல் கே-வின் எண்ணப் பிரதிபலிப்புகளைப் பின்தொடர்ந்தபடியே இருக்கிறார். ஆனால், அவையெல்லாம் குறிப்பாக நடப்பு நிகழ்வுகளின் மீதே வளைந்திருக்கின்றன. உடனடி சூழல்களில், அவ்வப்போது என்ன செய்ய வேண்டும்? விசாரணைக்குச் செல்ல வேண்டுமா அல்லது அதனை ஏமாற்றி தவிர்த்துவிட வேண்டுமா? பாதிரியாரின் அறிக்கைகளைப் பின்பற்றுவதா, வேண்டாமா? கே-வின் அக வாழ்க்கை சார்ந்த அனைத்தும் அவன் சிக்கிக்கொண்டிருப்பதாகக் கருதும் சூழல்களில் இருந்தே உணர்த்தப்படுகின்றன. அதோடு, அத்தகைய தருணங்களைக் கடந்து ஏதுவொன்றும் (கே-வின் நினைவுகள், பிறர் பற்றிய அவனது கருத்துக்கள், மனோவியல் சிதறல்கள்) அவனைப் பற்றி வெளிப்படுத்தப்படுவது இல்லை.

புரோஸ்டை பொறுத்தவரையில், மனிதனின் உள்ளார்ந்த பிரபஞ்சம் என்பது ஒரு அதிசயத்தை உள்ளடக்கியிருக்கிறது. நம்மை எப்போதும் வியப்பில் ஆழ்த்தியபடியே அதுவொரு முடிவிலியாக விரிந்தபடியே இருக்கிறது. ஆனால், காஃப்காவின் ஆச்சரியம் அது அல்ல. ஒரு மனிதனின் நடத்தைகளைத் தீர்மானிக்கும் அக உந்துதல்கள் எதுவென்று அவன் தனக்குள்ளாகக் கேட்டுக்கொள்வதில்லை. அவன் முற்றிலும் வேறொரு கேள்வியை எழுப்புகிறான். வெளியுலக தீர்மானங்கள் அதீத சக்திவாய்ந்தவையாக மாறியிருக்கும் சூழலில், அதனது கணத்தை, உள்ளத் துடிப்புகள் தாங்கும் வலுவை இழந்துவிட்ட பிறகு, உலகத்தில் மனிதனுக்கு என்ன சாத்தியங்கள்தான் எஞ்சி உள்ளன? ஒருவேளை, அவனுக்குப் பின்னால் ஓரினச்சேர்க்கைக்கான மன அமைப்போ, அல்லது மகிழ்ச்சியற்ற காதல் விவகாரமோ இருந்து, அது கே-வின் விதியையோ அல்லது அவனது அணுகுமுறைகளையோ மாற்றியிருக்குமா? சாத்தியமே இல்லை.

அதைத்தான் நீங்கள், The Unbearable lightness of being புதினத்தில் தெரிவிக்கிறீர்கள்: 'இந்த நாவல் அதன் ஆசிரியரின் ஒப்புதல் வாக்குமூலம் அல்ல; இந்த உலகமே ஒரு பொறியாக மாறியிருக்கும் சூழலில், அதற்குள் சிக்குண்டிருக்கும் ஒரு மனிதனின் வாழ்க்கை சார்ந்த விசாரணையே இது'. ஆனால், அந்த பொறி என்பதன் அர்த்தம் என்ன? அது எதனை பொருள்படுத்த விழைகிறது?

வாழ்க்கையென்பதே ஒரு பொறிதான் - ம்ம். இது நாம் எல்லோருமே அறிந்திருப்பதுதானே. நாம் பிறக்கிறோம் ஆனால், யாரும் நம்மை பிறக்கச் சொல்வதில்லை, நம்மால் தேர்வு செய்யப்படாத ஒரு உடலுக்குள் நாம் பூட்டி வைக்கப்படுகிறோம் அதோடு மரணத்தையும் தழுவும்படி விதிக்கப்பட்டிருக்கிறோம். மற்றொருபுறத்தில், உலகத்தின் விசாலத்தன்மை தப்பிப்பதற்கான பல்வேறு சாத்தியங்களை நமக்கு வழங்குவதாகவும் இருக்கிறது. இராணுவத்தில் இருந்து வெளியேறிவிடும் ஒரு படைவீரன், வேறொரு தேசத்தில் வாழ்க்கையை அமைத்துக்கொள்ள முடிகிறது. திடீரென நமது நூற்றாண்டில், உலகம் நம்மைச் சுற்றி மூடியபடியே வருகிறது. உலகத்தை ஒரு பொறியாக உருமாற்றும் தீர்க்கமான தருணமாக இருப்பது 1914இல் நிகழ்ந்த போர்தான். அதனை நாம் (வரலாற்றிலேயே முதல் முறையாக) உலகப்போர் என்று பெயரிட்டு அழைக்கிறோம். தவறுதலாக 'உலக' என்று குறிப்பிட்டிருக்கிறோம். ஏனெனில், அந்த போரில் ஐரோப்பிய நாடுகள் மட்டுமே பங்கெடுத்திருந்தன. அதிலும் அனைத்து ஐரோப்பிய நாடுகளும் அதில் ஈடுபடவில்லை. ஆனால், உலகம் என்கிற அந்த வினைச்சொல், இதன்பிறகு உலகத்தில் நிகழும் எதுவும் குறிப்பிட்ட எல்லைப் பகுதிக்கான பிரச்சினையாக மட்டுமே கருதப்பட மாட்டாது, அனைத்து பேரழிவுகளும் உலத்தின் பொருட்டாகவே நிகழும் எனும் அச்சுறுத்தக்கூடிய உணர்வையே அச்சொல் பிரதிபலிக்கிறது. அதோடு, நாம் மேலும் மேலும் வெளிப்புற சூழல்களின் காரணமாகவே

தீர்மானிக்கப்படுகிறோம். நம்மால் தப்பிக்கவே முடியாத வகையில் தருணங்கள் பெருவுரு எடுத்திருக்கின்றன என்றும் இனி உலகத்தில் அனைத்து மனிதர்களும் தனித்த அடையாளங்களை அழித்துவிட்டு, ஒருவர் மற்றவரையே பிரதிபலித்தாக வேண்டிய அழுத்தத்தையும் அந்த ஒற்றைச் சொல் (உலகம்) ஏற்றிவிடுகிறது.

ஆனால், என்னைப் புரிந்துகொள்ளுங்கள்; என்னுடைய படைப்புகளை உளவியல்ரீதியிலான நாவல்கள் என்று அழைக்கப்படும் வகைப்பாட்டிற்கு வெளியில் நான் வைக்க முயன்றால், உடனடியாக எனது கதாபாத்திரங்களின் அகரீதியிலான வாழ்க்கை முறையை சுயமாக வெளிப்படுத்துவதிலிருந்து அவைகளை நான் தடுத்துவிடுகிறேன் என்கிற அர்த்தமில்லை. என் நாவல்கள் வேறு கேள்விகளையும் வேறு புதிர்களையும் முதன்மைப்படுத்த விரும்புகிறது என்பதே அதன் அர்த்தம். அதோடு, உளவியல் துறையின் மீது ஈர்க்கப்பட்டு எழுதப்படுகின்ற நாவல்களை நான் அடியோடு எதிர்க்கிறேன் என்பதும் இதற்கு அர்த்தமில்லை. புராஸ்ட்டுக்கு பின்னர் ஏற்பட்ட நிலை, உண்மையில் என்னை ஏக்கத்தில் ஆழ்த்துவதாகவே இருக்கிறது. புராஸ்டுடன் சேர்ந்து, ஒரு மகத்தான அழகு நம் வசத்தில் இருந்து என்றென்றைக்கும் மீட்கவியலாத படியே விலகியபடியே இருக்கிறது.

கோம்ப்ரோவிச்சு-க்கு (Gombrowicz) ஒரு யோசனை வந்தது. ஒருவேடிக்கையான நகைச்சுவை உணர்வுமிக்க யோசனை: நமது சுயத்தின் எடை, அவர் சொல்கிறார், உலகத்தின் ஒட்டுமொத்த மக்கள்தொகையின் எண்ணிக்கையுடன் தொடர்புடையது. அவ்வகையில், டெமோகிரிட்டஸ் மனித நேயத்தின் நானூறாவது மில்லியனை பிரதிநிதித்துவப்படுத்துகிறார். பிராம்ஸ் ஒரு மில்லியனையும் கோம்ப்ரோவிச்சு அவரளவில் இரண்டு மில்லியனையும் பிரதிநிதித்துவப்படுத்துகிறார். இந்த கணக்கீட்டின்படி, புரோஸ்டியனின் முடிவிலியின் எடை, அதாவது சுயத்தின் எடை, சுயத்தின் உள்ளார்ந்த வாழ்க்கை மேலும் மேலும் எடையற்றதாக, இலகுவனதாக மாறியபடியே இருக்கிறது. அதோடு, இந்த இலகுத்தன்மையை நோக்கிய பந்தயத்தில், நாம் ஒரு துயரார்ந்த விதியின் எல்லையினை கடந்துவிட்டோம்.

சுயத்தின் 'தாங்கிக்கொள்ள முடியாத இலகுத்தன்மை' என்பது உங்களது தொடக்கக் கால எழுத்துக்களில் இருந்தே உங்களை ஆட்டிப்படைத்தபடியே இருக்கிறது. உதாரணத்திற்கு laughing loves-ல் வருகின்ற 'Eduard and God' கதையை எடுத்துக்கொள்கிறேன். இளைய ஆலிஸுடனான முதல் இரவுக்கு பிறகு, எட்வர்ட் தனக்கு தீர்க்கமானதாக இருக்கும் விநோதமான ஒரு அசௌகர்யத்தால் பீடிக்கப்படுகிறான். அவன் தனது பெண்ணை பார்த்து, 'அவளுடைய நம்பிக்கைகள் அனைத்தும் அவளது தலைவிதிக்கு எதிரானதாகவே இருக்கிறது. அதோடு அவளது தலைவிதி குறிப்பாக அவளது உடம்புக்கு மட்டுமே புறம்பான ஒன்றாக இருக்கிறது. அவன் அவளைத் தற்செயலான விபத்தால் உண்டாகிய உடல், எண்ணம் வாழ்க்கைப் போக்கு ஆகியவற்றின் இணைவாகவே கருதுகிறான். அவன் பார்வையில் அது வனப்பில்லாத இணைவு. அதோடு, தன்னிச்சையானது நிலையற்றதும்கூட' என நினைக்கிறான். உங்களது மற்றொரு சிறுகதையான, 'The Hitchhiking Game'-ல் கதையின் கடைசி பத்தியில் அந்த பெண் தனது அடையாளம் சார்ந்த உறுதியற்றத் தன்மையால் அவதியுற்று, 'நான் நானேதான், நான் நானேதான், நான் நானேதான்..' என்று விம்மி அழுதபடியே இருக்கிறாள்.

The Unbearable lightness of being-ல் தெரேசா நிலைக்கண்ணாடியில் தன்னை பார்க்கிறாள். அவள் தனது மூக்கு ஒவ்வொரு நாளும் மில்லிமீட்டர் அளவுக்கு வளர்ந்தபடியே இருந்தால், என்னவாகும் எனக் கற்பனை செய்கிறாள். தனது முகம் அடையாளம் காணப்படாமல் ஆவதற்கு எவ்வளவு காலம் ஆகும்? அப்படி அவளுடைய முகம் தெரேசாவின் முகச்சாயலில் இருந்து வழுவிவிடுகிறது என்றால், அப்போதும் அவள் தெரேசாவாகவே இருப்பாளா? சுயம் என்பது எங்கிருந்து தோற்றுவிக்கிறது, எங்கு முடிவை எய்துகிறது? பாருங்கள்: ஆன்மாவின் அளவிட முடியாத முடிவிலியில் ஆச்சரியப்பட எதுவும் இல்லை. ஆனால், நிச்சயமற்ற சுயத்தின் தன்மையும் அதன் அடையாளமும்தான் உண்மையில் ஆச்சரியப்பட வேண்டியது.

உங்களது நாவல்களில் உள்ளார்ந்த விவரணைகள் என்பது முழுமையாகவே தவிர்க்கப்பட்டிருக்கிறது.

புளூமின் தலைக்குள் ஜாய்ஸ் ஒரு மைக்ரோபோனை பொருத்தியிருந்தார். உள்ளார்ந்த விவரணையின் மீதான அற்புதமான ஒட்டறிதலுக்கு நன்றி. நாம் ஏராளமான அளவில், நாம் யார் என்பதை அறிந்து வைத்திருக்கிறோம். ஆனால், என்னைப் பொறுத்தவரையில் நான் அந்த மைக்ரோபோனை பயன்படுத்தப்போவதில்லை.

Ulysses-ல் முழு நாவலிலும் இந்த உள்ளார்ந்த விவரணை என்பது பரவியிருக்கிறது. அந்த நாவலின் கட்டமைப்பே, அதில்தான் எழுப்பட்டிருக்கிறது. அதுதான் ஆதிக்கம் செலுத்துகிறது. நாம் இப்படிப் பேசலாமா? உங்களது படைப்புகளில் தத்துவார்த்தமான தியான நிலைதான் செயலாற்றுகிறது?

'தத்துவார்த்த' எனும் சொல்லைப் பொருத்தமற்றதாக கருதுகிறேன். தத்துவம் தனது சிந்தனையை கதாபாத்திரங்களும் தருணங்களும் இல்லாத ஒரு சுருங்கிய நிலையில் இருந்துதான் வளர்த்தெடுக்கிறது.

The Unbearable being of Lightness நாவலை, நீட்சேவின் நித்திய வருகையின் பிரதிபலிப்பில் இருந்து தொடங்கியிருப்பீர்கள். ஆனால், கதாபாத்திரங்களும் தருணங்களும் இல்லாத சுருக்கமான நிலையில் இருந்து வளர்த்தெடுக்கப்படும் தத்துவார்த்த சிந்தனை என்பது அதுதானா?

இல்லவே இல்லை! கதாபாத்திரத்தின் அடிப்படை சூழலை விவரிக்கும் நாவலின் முதல் வரியிலேயே, அந்த பிரதிபலிப்பு நேரடியாக நடந்துவிடுகிறது. தாமஸ் - அவனுடைய சிக்கல்கள் இவ்வாறு முன்வைக்கப்படுகிறது: நித்திய வருகை என்பது சாத்தியமேயில்லாத உலகில், நிலவும் அவனது இலகுவான இருப்பே ஆகும். பாருங்கள், இறுதியில் நாம் மீண்டும் அதே கேள்விக்கு வந்துவிட்டோம்: உளவியல் நாவல் என்று வகைப்படுத்தப்படுகின்ற நாவல் வடிவதற்கு அப்பால் வேறென்ன இருக்கிறது? அல்லது வேறொரு வழியை



முன்வைத்துப் பேசுவோம்: உளவியலற்றத்தன்மையில் எவ்வாறு நாம் சுயத்தைக் கண்டடைவது? என்னுடைய நாவல்களில் சுயத்தைக் கண்டடைவது என்பது, அதனுடைய இருத்தலியல் சிக்கல்களின் சாரம்சத்தைக் கைப்பற்றுவதே. இருத்தலியல் குறியீட்டைக் கைப்பற்றுவது.

The Unbearable being of Lightness நாவலை எழுதிக்கொண்டிருக்கும்போது, இந்த அல்லது அந்த கதாபாத்திரத்தின் இருத்தலியல் குறியீடு என்பது சில சிறப்பான வார்த்தைகளால் ஆக்கப்பட்டிருப்பதை உணர முடிந்தது. தெரேசாவுக்கு உடல், ஆன்மா, பலவீனம், முட்டாள்தனம், சொர்க்கம், தலைச்சுற்றல் போன்ற வார்த்தைகள். தாமஸுக்கு இலகுத்தன்மையும் எடையும். 'தவறாக அர்த்தப்படுத்திக்கொள்ளப்பட்ட வார்த்தைகள்' எனும் பகுதியில் பிரான்க் மற்றும் சபீனாவுக்கான இருத்தலியல் குறியீடுகளை வெவ்வேறு வார்த்தைகளை அலசுவதன் மூலமாக ஆராய்ந்து பார்த்தேன். பெண், நம்பகத்தன்மை, துரோகம் இசை, இருள், வெளிச்சம், அணிவகுப்பு, அழகு, தேசம், கல்லறை, வலிமை. இந்த ஒவ்வொரு வார்த்தைக்கான அர்த்தங்களும் இன்னொரு மனிதரின் இருத்தலியல் குறியீட்டில் வேறு அர்த்தம் பெறுகின்றன. ஆனால், Abstracto பகுதியில், இருத்தலியல் குறியீடு ஆராயப்படவில்லை. அது தன்னை கொஞ்சம் கொஞ்சமாகச் செயல்களின் மூலமாகவும் தருணங்களின் மூலமாகவும் சுயமாக வெளிப்படுத்திக்கொள்கிறது.

Life is everywhere-ன் மூன்றாவது பகுதியை எடுத்துக்கொள்ளுங்கள்: கூச்ச சுபாவமுடைய நாயகன் ஜெரோமில் இன்னமும் கன்னி கழியாமல்தான் இருக்கிறான். ஒருநாள் பெண்ணொருத்தியுடன் வெளியில் உலா சென்றிருக்கும்போது, அந்த பெண் திடீரென ஒரு கணத்தில் அவனது தோள்களின் மீது தனது தலையைச் சாய்க்கிறாள். உடலளவில் அவனுக்குக் கிளர்ச்சியும் மகிழ்ச்சியும் கூடுகிறது. அந்த சிறிய தருணத்தை அப்படியே நிறுத்திவிட்டு, நானொரு குறிப்பை எழுதியிருக்கிறேன்: 'ஜெரோமில் தனது இதுவரையிலான வாழ்க்கையில் அனுபவித்திருக்கும் உச்சபட்ச காம கிளர்ச்சியென்பது தனது தோள்பட்டையில் ஒரு பெண்ணினது தலையை சுமந்திருப்பதே'. அதிலிருந்து, ஜெரோமிலின் பாலியல் இயல்பை நான் கைப்பற்ற முயற்சித்தேன்: 'பெண்ணின் உடலை விடவும் பெண்ணின் தலை அவனுக்கு அதிக கிளர்ச்சியூட்டுவதாக இருந்தது'. நான் தெளிவுபடுத்தி விடுகிறேன். இதன்மூலமாக, ஒரு பெண்ணினது உடல் மீது அவனுக்கு அதிருப்தி என்பது அர்த்தமில்லை. ஆனால், 'அவன் ஒரு பெண்ணுடைய நிர்வாண உடலுக்காக ஏங்கவில்லை. ஆனால், அந்த பெண்ணின் உடலினுடைய நிர்வாணத்தன்மை ஒளிரும் அவளது முகத்துக்காகவே அவன் ஏங்கித் தவித்திருக்கிறான்; பெண்ணினுடைய உடலின் மீது உடமைக் கொண்டாட அவன் ஏங்கியிருக்கவில்லை. ஆனால், அவன் மீதிலான அளவற்ற காதலால், தனது உடலை திறப்பதற்கும் தயாராக இருக்கும் ஒரு பெண்ணினது முகத்தை உடமைக் கொண்டாடவே அவன் ஏங்கி தவித்திருக்கிறான்'.

அந்த செயலுக்குப் பெயரிட முயன்றேன். அதனால், 'மென்மையான' எனும் சொல்லைத் தேர்வு செய்தேன். அதோடு, அவ்வார்த்தையை ஆராயவும் முற்பட்டேன்: 'மென்மை என்றால் என்ன?'. அதன்

தொடர்ச்சியாக எனக்குப் பதில்களும் கிடைத்தன: 'ஒரு மனிதனுக்கு மென்னுணர்வு என்பது இளமைப் பருவத்தின் தொடக்க நிலைக்கான தூண்டுதலைப் பெறும் தருணத்தில் உருவாகிறது. குழந்தைப் பருவத்தில் அவன் பாராட்டாத, அப்பருவத்திற்குரிய சாதகங்களை அவன் அதீத ஆர்வத்துடன் உணர்கிறான்'. மேலும் 'மென்னுணர்வு என்பது இளமைப் பருவம் அவனுக்குள் சொட்டு சொட்டாகக் கிளர்த்திவிடும் அச்ச உணர்வே ஆகும்'. மேலும் கூடுதலாக, 'மென்னுணர்வு என்பது ஒருவருக்கு ஒருவர் ஒத்திசைவாக மற்றவரைக் குழந்தையைப்போல நடத்த சிறிய செயற்கை வெளியை உருவாக்குவது'.

பாருங்கள், ஜெரோமிலின் மண்டைக்குள் என்ன நிகழ்கிறது என்று நான் உங்களுக்குக் காண்பிக்கவில்லை. பதிலாக, அத்தருணங்களில் எனக்குள் என்ன நிகழ்கிறது என்பதைத்தான் நான் காண்பிக்கிறேன். எனது ஜெரோமில்லை நீண்ட காலமாக நான் கூர்ந்து கவனித்து வருகிறேன். படிப்படியாக அவனது நடவடிக்கைகளின் இதயத்திற்குள் இறங்கி, அதனைப் புரிந்துகொள்ளவும் அதற்குப் பெயரிடவும் அதனைக் கைப்பற்றவும் நான் முயல்கிறேன்.

The Unbearable being of Lightness நாவலில், தெரேசா தாமஸுடன் வசிக்கிறாள், என்றாலும் அவளுடைய காதல், அவளது முழு ஆற்றல்களையும் கோருவதாக இருக்கிறது. ஆனால், அவளால் திடீரென தனது வாழ்க்கையை அவ்விதமாகவே தொடர முடியவில்லை. அவள் பின் திரும்பிச் செல்ல விரும்புகிறாள். அவள் எங்கிருந்து வந்தாலோ, அதே முதல் புள்ளியை நோக்கித் திரும்புகிறாள். இங்கு நான் எனக்குள்ளாகக் கேட்டுக்கொள்கிறேன்: அவளுக்குள் என்ன நிகழ்கிறது? அப்போது எனக்குக் கிடைத்த பதில் இதுதான்: வெர்டிகோ அவளில் தலைத்தூக்கியிருக்கிறது. ஆனால், வெர்டிகோ என்றால் என்ன? அதற்கான விளக்கத்தைத் தேடிய நான் கண்டடைந்த பதில், 'வீழ்ச்சியை எய்துவதற்கான அதி தீவிரமான ஏக்க நிலை'. ஆனால், மறுபடியும் என்னைச் சரிசெய்துகொண்ட நான், வெர்டிகோவின் விளக்கத்தை மேலும் துரிதப்படுத்தினேன், 'வெர்டிகோ என்பது பலவீனத்தின் மீதான பேதைமை. தனது பலவீனத்தை அறிந்திருக்கும் ஒருவன் அதனைத் துணிந்து எதிர்கொள்ள முயலாமல், அதற்கு ஒத்திருந்து தம்மை வீழ்த்திக்கொள்வது. இந்த பலவீனத்தோடே அவன் மதுவருந்துகிறான். தன்னை மேலும் மேலும் பலவீனப்படுத்திக்கொண்டு, நடுத்தெருவில் எல்லோரின் பார்வையின் முன்னாலும் தன்னை சரித்துக்கொள்ள விழைகிறான். கீழே விழுந்துவிட வேண்டும். கீழே என்பதையும் கடந்தும் தன்னை சரித்துக்கொள்ள வேண்டும்'.

இந்த வெர்டிகோதான் தெரேசாவை நாம் அறிந்துகொள்வதற்கான மையக்கூறுகளில் ஒன்று. உங்களையோ என்னையோ அறிந்துகொள்வதற்கான மையக்கூறு அதுவல்ல. அதோடு, அத்தகைய வெர்டிகோத்தன்மை நமக்கும் சாத்தியமானதுதான் என்பதை இருவருமே புரிந்துதான் வைத்திருக்கிறோம். இருத்தலியல் சாத்தியங்களில் அதுவும் ஒன்றுதான். இங்கு தெரேசாவை, 'அகங்காரத்திற்கான பரிசோதனையாக' உருவாக்கி, அவள் வழியே, வெர்டிகோ என்பதையும் அதன் சாத்தியங்களையும் புரிந்துகொள்ள வேண்டும்.

ஆனால், இது குறிப்பிட்ட சில தருணங்களின் மீதிலான விசாரணை மட்டுமே அல்ல. அந்த முழு நாவலும் முழுமையான ஒற்றை விசாரணைதான். தியான முறையிலான விசாரணை (விசாரணை முறையிலான தியானம்) அடிப்படையில்தான் எனது அனைத்து நாவல்களுமே கட்டமைக்கப்படுகின்றன. Life is elsewhere நாவலை எடுத்துக்கொள்ளுங்கள். அதற்கு நான் முதலில் வைத்திருந்த பெயர், The Lyrical Age என்பதே ஆகும். எனது நண்பர்கள் அந்த பெயர் தெளிவற்றதாகவும் தடைசெய்யப்பட்டது போலவும் இருப்பதாக எனக்கு அழுத்தம் கொடுத்ததாலேயே இறுதி நிமிடத்தில் அந்த தலைப்பை மாற்றினேன். அவர்களிடம் நாவலைக் கொடுத்திருக்கக்கூடாது. ஒரு நாவலுக்கு, அதன் மைய வகைப்பாட்டைச் சார்ந்து பெயரிடுவது நல்ல செயலாகும். The Joke. The Book of Laughter and Forgetting. The Unbearable being of Lightness. அதோடு, Laughable loves. இந்த தலைப்பை, 'வேடிக்கையான காதல் கதைகள்' எனும் அர்த்தத்தில் பொருள்கொள்ளக்கூடாது. காதல் எனும் கருத்தாக்கம் எப்போதுமே தீவிரத்தன்மையுடனேயே தொடர்புடையதாக இருக்கிறது. ஆனால், Laughable loves எனும் வகைப்பாடு, தீவிரத்தன்மை நீக்கப்பட்ட காதல் என்பதாகவே இருக்கிறது. நவீன மனிதன் பற்றிய விமர்சனப்பூர்வமான கருத்து. ஆனால், Life is Elsewhere-ஐ எடுத்துக்கொண்டால், அந்த நாவல் சில கேள்விகளில் மையங்கொண்டிருக்கிறது. கவித்துவத்தின் வெளிப்பாடு என்பது என்ன? இளமைப் பருவம் என்பது எப்படி உணர்ச்சி கொந்தளிப்பின் கவிதைகளை உருவாக்கும் பருவமாக இருக்கிறது? கவிதை வெளிப்பாடு - புரட்சி, இளமை எனும் மூன்று நிலைகள் என்பதன் அர்த்தம் என்ன? கவிஞனாக இருப்பது எப்படிப்பட்டது?

அந்த நாவலை எனது குறிப்பேட்டில் நான் எழுதி வைத்திருக்கும் எனது வேலைகள் இயங்கும் செயல்பாடு குறித்த அனுமானத்தின்படி, எப்படித் தொடங்கினேன் என்பது நினைவில் இருக்கிறது, 'ஒரு இளம் வயதுடைய கவிஞன், தமது தாயாரால் உந்துதல் அளிக்கப்பட்டு, தன்னால் நுழைய முடியாத உலகத்திடம் தன்னை பற்றி வெளிப்படுத்திக்கொள்கிறான்'. பாருங்கள், இந்த விவரணையில் சமூகவியல் நோக்கோ, அழகியல் வர்ணனைகளோ அல்லது உளவியல் கூறுகளோ எதுவுமே இல்லை.

இதில் நிகழ்வியல் விவரணையாக இருக்கிறது.

அந்த அடைமொழி தவறாக இல்லையென்றாலும் அதனை ஒரு வரையறையாகப் பயன்படுத்துவதில் இருந்து என்னையே நான் விலக்கிக்கொள்கிறேன். கலை என்பதை வெறுமனே தத்துவார்த்த மற்றும் கோட்பாட்டுப் போக்குகளின் வழித்தோன்றலாக வரையறைச் செய்யும் பேராசிரியர்கள் என்னை மிகுதியாக அச்சுறுத்தவே செய்கிறார்கள். நாவல் கலை பிராய்டுக்கு முன்பாகவே நனவிலி மனதை கையாண்டிருக்கிறது, மார்க்ஸுக்கு முன்பாகவே வர்க்க போராட்டத்தைக் கையாண்டிருக்கிறது, நிகழ்வியலாளர்களுக்கு முன்னதாகவே நிகழ்வியலை (மனித சூழல்களின் சாரம்சத்தின் மீதிலான விசாரணையை) கையாண்டிருக்கிறது. புரோஸ்டில்

**நாவலின் கற்பனையான உலகத்தோடு பயணப்படுவதையே நாம் அடைய வேண்டுமே தவிர, யதார்த்த உலகத்தோடு அதனைப் பொருத்திப் பார்த்து குழப்பத்தில் ஆழ்ந்துவிடக்கூடாது. ஆனால், உளவியல் யதார்த்தவாதத்தின் உத்திதான் அதற்கு இன்றியமையாதது என்பதாக நான் கருதவில்லை.**

'என்னவொரு அற்புதமான நிகழ்வியல் விவரணை' என்கிறார்கள். புரோஸ்ட்டுக்கு நிகழ்வியல் கோட்பாடு என்றால் என்னவென்றே தெரியாது!

இதுவரையிலான நமது உரையாடலைத் தொகுத்துக்கொள்ளலாம்: ஒருவருடைய சுயத்தை கைப்பற்றுவதற்கு ஏராளமான சாத்தியங்கள் இருக்கின்றன. முதலில், செயல் வடிவத்தில், பிறகு அக வாழ்க்கையின் மூலமாக. உங்களை பொறுத்தவரையில் நீங்கள் இவ்வாறு பிரகடனப்படுத்துகிறீர்கள்: சுயம் என்பது அதனுடைய இருத்தலியல் சிக்கலின் சாரம்சத்தின் அடிப்படையிலேயே தீர்மானிக்கப்படுகிறது. உங்களது படைப்புகளுக்கு, இந்த பார்வை பலவிதமான விளைவுகளை உண்டுபண்ணியிருக்கிறது. எடுத்துக்காட்டாக, சூழ்நிலைகளின் சாரம்சத்தை புரிந்துகொள்வது குறித்து நீங்கள் வலியுறுத்தி எடுத்துரைப்பது, வகைப்படுத்துதல் சார்ந்த நுட்பங்கள் அனைத்தையும் அவசியமற்றதாக கருதுகிறது. உங்களது கதாபாத்திரங்களின் புறவயமான தோற்றம் குறித்து கிட்டதட்ட நீங்கள் எதுவுமே குறிப்பிடவில்லை. அதோடு சூழ்நிலைகளின் பகுப்பாய்வு என்பது, உளவியல் நோக்கங்களின் விசாரணையை விடவும் உங்களுக்கு ஆர்வமூட்டுவதாக இருப்பதை உணர முடிகிறது. கூடுதலாக, உங்களது கதாபாத்திரங்களின் கடந்த காலம் பற்றிய கருத்துகளிலும் நீங்கள் முரண்படுவதாகவே தெரிகிறது. ஆனால், இத்தகைய உங்களது படைப்புகளில் கதாபாத்திரங்களை சுருக்கமாகவே விவரித்து செல்வதால், அவைகளின் ஆயுட்காலம் குறைவானதாக ஆகிவிடும் அபாயமும் இருக்கிறதல்லவா?

அதே கேள்வியை காஃப்கா சார்ந்தும் முசில் (Musil) சார்ந்தும் கேட்க முயன்று பாருங்கள். உண்மையில், முசில் பற்றி இக்கேள்வி கேட்கப்பட்டிருக்கிறது. சில தீவிர அறிவாளிகள் கூட முசில் ஒரு உண்மையான நாவலாசிரியர் அல்ல என்று புகாருரைத்திருக்கிறார்கள். வால்டர் பெஞ்சமின், அவரது அறிவு செயல்பாட்டைக் கண்டு வியந்திருக்கிறாரே தவிர, அவரது கலையை அவர் பொருட்படுத்தவில்லை. எடுவார்டு ரோடிடி (Edouard Roditi), முசிலின் கதாபாத்திரங்கள் உயிரற்று இருப்பதாகச் சொல்லி, புரோஸ்ட்டையே தனது ஆதர்சமாகவும் முன்மொழிகிறார். டியோட்டிமாவோடு (Diotima) ஒப்பிடுகையில், மேடம் வெர்டூரின் (Verdurin) எவ்வளவு உண்மையாகவும் உயிரோட்டமாகவும் இருக்கிறார் என்கிறார் அவர். உண்மையில், இரண்டுநூற்றாண்டுகள் செழித்தோங்கிய உளவியல் யதார்த்தவாதம் சில மீறவே முடியாத தரவுகளை உருவாக்கி வைத்திருக்கிறது.

1. ஒரு எழுத்தாளர் தான் படைக்கும் கதாபாத்திரம் பற்றி முடிந்தவரையிலான தகவல்களைக் கொடுத்துவிட வேண்டும். அவனுடைய புறவயமான தோற்றம், அவன் உரையாடும் முறை, பழக்கங்கள் அனைத்தும் அதில் இடம்பெற்றிருக்க வேண்டும்.

2. வாசகருக்கு கதாபாத்திரங்களின் கடந்தகாலம் பற்றி முழுமையான சித்தரிப்பைக் கொடுத்துவிட வேண்டும். ஏனெனில், அவனது இன்றைய தற்சமய செயல்கள் அனைத்தும் அவனது கடந்த கால வாழ்க்கையில் இருந்து உந்துதல் பெற்றதே.

3. அந்த கதாபாத்திரத்திற்கு முழுமையாகச் சுதந்திரத்தைக் கொடுத்திருக்க வேண்டும். அதாவது எழுத்தாளரின் கருத்துக்கள் அனைத்தும் தவிர்க்கப்பட வேண்டும். இதன் மூலமாக, தொந்திரவுக்கு உள்ளாகாத வாசகர்கள் புனைவில் நிகழ்த்திக் காட்டப்பட்டுள்ள கதாபாத்திரங்களுக்குத் தாமாகவே ஒரு உருவத்தைக் கொடுத்து, புனைவு எனும் எல்லையில் இருந்து அகற்றி அதனை ஒரு யதார்த்த உருவமாகவே உருவாக்கிக்கொள்ளுதல்.

இப்போது, முசில் இந்த பழைய வாசகருக்கும் நாவல் பிரதிக்கும் இடையிலான தொடர்பை உடைப்பவராக இருந்தார். அவருடன் சேர்ந்து வேறு சிலரும் இதனைச் சாத்தியப்படுத்தினார்கள். புரோச்சின் (Broch) மிகச் சிறந்த பாத்திர வார்ப்பான இஸ்ச்சின் (Esch) உருவ அமைப்பு குறித்து நமக்கு என்னத் தெரியும்? அவனுக்குப் பெரிய பற்கள் இருந்தன என்பதைத் தவிர, ஒன்றுமே தெரியாது. கே- கதாபாத்திரத்தின் குழந்தைப் பருவம் பற்றி நமக்கு என்னத் தெரியும்? அல்லது ஸ்வீக்ஸ் பற்றி என்ன தெரியும்? அதோடு முசிலோ, புரோச்சோ, கோம்ப்ரோவிச்சோ தங்கள் நாவல்களில் மூளையாக தாங்கள் இருப்பது பற்றி சங்கடத்துடனேயே இருந்தார்கள். கதாபாத்திரம் என்பது வாழ்ந்துகொண்டிருக்கும் ஒரு மனித உயிரின் வளர்த்தெடுக்கப்பட்ட சித்திரம் அல்ல. அது ஒரு கற்பனையான உயிரி. ஒரு ஆய்வு ரீதியிலான அகந்தை. இவ்வகையில், நாவல் தனது உயிரிக்களுடன் மீள் தொடர்புகொள்கிறது. டான் குஹேட்டேவை ஒரு உயிருள்ள மனிதராகக் கற்பனை செய்வது சாத்தியமில்லாதது. அதோடு, நமது நினைவுகளில் எந்த கதாபாத்திரம்தான் உயிருடன் இருக்கிறது?

என்னைப் புரிந்துகொள்ளுங்கள், இதன்மூலமாக நான் வாசகரையும், அப்பாவியாக நாவலை அர்த்தப்படுத்திக்கொள்வதில் எங்களுக்கு உரிமை இருக்கிறது என்று வாசகர்கள் கருதுவதையும் இழிவுபடுத்த முயலவில்லை. நாவலின் கற்பனையான உலகத்தோடு பயணப்படுவதையே நாம் அடைய வேண்டுமே தவிர, யதார்த்த உலகத்தோடு அதனைப் பொருத்திப் பார்த்து குழப்பத்தில் ஆழ்ந்துவிடக்கூடாது. ஆனால், உளவியல் யதார்த்தவாதத்தின் உத்திதான் அதற்கு இன்றியமையாதது என்பதாக நான் கருதவில்லை. The Castle-ஐ எனது பதினான்காவது

வயதில் முதல்முறையாக வாசித்தேன். அதே சமயத்தில், எங்கள் வசிப்பிடத்திற்கு அருகில் இருந்த ஒரு ஐஸ் ஹாக்கி விளையாட்டாளரைப் பெரிதும் நான் மதித்து வந்தேன். கே கதாபாத்திரத்தின் தோற்ற உருவமாக அவரையே கருதினேன். இன்றும் அவரை அவ்வகையிலேயே நான் பார்க்கிறேன். நான் என்ன சொல்ல வருகிறேன் என்றால், வாசகனின் கற்பனை இவ்விதமாக இயல்பாகவே, எழுத்தாளரின் கற்பனையை முழுமையடையச் செய்துவிடுகிறது. தாமஸ் வெளிர் நிறத்தில் இருப்பவனா? அல்லது கறுப்பு தோல் உடையவனா? அவனுடைய தந்தை செல்வம் நிறைந்தவராக இருந்தாரா அல்லது வறுமையில் வாடியவராக இருந்தாரா? நீங்களே அதனைத் தீர்மானித்துக் கொள்ளுங்கள்.

ஆனால், நீங்கள் எப்போதுமே இந்த விதியை பின்பற்றுவது இல்லையே: தாமஸுக்கு விவரணையில் எந்தவொரு முன்காலமும் கொடுக்கப்படவில்லை. ஆனால், தெரேசாவுக்கு அவளது குழந்தைப் பருவ நிகழ்வுகளை மட்டும் அல்லாமல், அவளுடைய தாயின் குழந்தைப் பருவ ஞாபகங்களும்கூட சித்தரிக்கப்பட்டிருக்கிறது.

நாவலில் நீங்கள் இந்த வரியை எதிர்கொள்வீர்கள்: 'அவளுடைய முழு வாழ்க்கையும் அவளது தாயினுடைய வாழ்க்கையின் தொடர்ச்சியை போலவே இருக்கிறது. பில்லியர்ட் மேசையில் விளையாட்டாளரின் தோள்பட்டைக்கும் அதன் முன், விசை செலுத்தப்பட்டு, மேசையில் உருளும் பந்துக்கும் உள்ள தொடர்ச்சியைப் போன்றது அது'. நான் அவளுடைய தாய் பற்றிப் பேசுகிறேன் என்றால், தெரேசா சார்ந்த குறிப்புகளாக, அவள் பற்றிய தரவுகளாக அதனை நான் பயன்படுத்தவில்லை. ஆனால், தெரேசா அவளுடைய தாயின் தொடர்ச்சியாகவும் தாயே அவளது மையக் கருப்பொருளாகவும் அதனால், அவள் தொடர்ந்து துயருறுவதையுமே சொல்ல அங்கு முற்படுகிறேன். கூடுதலாக அவள் சிறிய மார்பகங்களை உடையவள் என்பதும் அவளது முலைகளைச் சுற்றி அடர்ந்த கருமை வட்ட வடிவில் திரண்டிருக்கிறது என்பதும் நமக்குத் தெரியும். முதன்மை போர்னோ செயற்பாட்டாளரால் ஏழைகளுக்காக வரையப்பட்ட கருப்பு திராட்சைப்போல அவை இருக்கின்றன. இந்த குறிப்பு மிக அவசியமாகத் தேவைப்படுகிறது. ஏனெனில், தெரேசாவுக்கு தனது உடல் என்பது மற்றுமொரு மையக் கருத்தாக இருக்கிறது. அதற்கு முற்றிலும் நேரெதிராக, அவளுடைய கணவன் தாமஸ் பற்றி எந்தவொரு குறிப்பையும் நான் கொடுப்பதில்லை. அவனுடைய குழந்தைப் பருவம் பற்றியோ, அவனது பெற்றோர் பற்றியோ, அவனது குடும்பம் பற்றியோ ஒரு குறிப்பும் இடம்பெற்றிருப்பதில்லை. அவனது உடல், முக அமைப்பு போன்ற எதுவுமே நமக்குத் தெரிவிக்கப்படுவதில்லை. ஏனெனில், அவனது இருத்தல் சிக்கலின் சாரம்சம் வேறொரு மைய பேசுபொருளில் வேர் கொண்டிருக்கிறது. இந்த தகவல்களற்றத்தன்மை அவனை குறைவுயிர் கொண்டவனாக ஆக்குவதில்லை.

ஒரு கதாபாத்திரத்திற்கு உயிரூட்டுவது என்பது அவனது இருத்தலியல் சிக்கலின் அடியாழத்திற்குள் பயணிப்பதே ஆகும். இன்னும் தெளிவுறச் சொல்வதென்றால், அவனது சூழ்நிலைகளின் அடியாழத்திற்குள் செல்வது, அவனது நோக்கங்கள், அதோடு அவனது வார்த்தைகள் கூட அவனை வடிவமைப்பதில் பெரும் பங்காற்றுகின்றன. அதற்குமேல் ஒன்றுமில்லை.

*அப்படியென்றால், உங்கள் பார்வையில் நாவல் என்பது, இருத்தலியல் மீதான கவித்துவ தியான நிலை. எனினும் உங்களது நாவல்கள் அவ்வகையில் புரிந்துகொள்ளப்படுவதில்லை. சமூகவியல், வரலாற்றியல் அல்லது கருத்தியல் இடையீடுகளை சீண்டும் வகையிலான பல அரசியல் தருணங்கள் உங்களது நாவல்களில் தொடர்ச்சியாக வருகின்றன. இருத்தலியல் மீதான புதிர்மையை ஆராய்வதையே முதன்மை நோக்கமாகக் கொண்டிருப்பதாக உங்கள் படைப்புகளை பற்றிக் குறிப்பிடும் நீங்கள், அதற்குள் இயங்குகின்ற சமூகவியல் வரலாற்றின் மீதான உங்களது விருப்பத்தை எப்படி ஈடு செய்கிறீர்கள்?*

ஹைடேஜர் (Heidegger) இருப்பை பெருவாரியாக அறியப்பட்ட ஒரு சூத்திரத்தின் மூலமாக வகைப்படுத்துகிறார். 'உலகத்துள் இருத்தல்'. உலகத்துடனான மனிதனின் தொடர்பு என்பது பொருளுக்கு விளக்கம் சொல்வதாகவோ, ஓவியத்துக்குக் கண்கள் போலவோ, அல்லது ஒரு மேடைக்கு நடிகருடைய பங்களிப்புக்கு ஒத்ததாகவோ இருப்பதில்லை. நத்தையும் அதனைக் கூட்டையும்போல, உலகமும் மனிதனும் பிணைத்திருக்கிறார்கள். உலகம் என்பது மனிதனின் ஓர் அங்கம்தான். அவனது பரிமாணமே உலகம் என்பது. உலகம் மாற்றமடையும்போது, அதனோடு தொடர்புடைய இருத்தலும் மாறுதலுக்கு உட்படவே செய்கிறது. பால்ஸாக்கில் (Balzac) இருந்து, நமது இருப்பின் உலகம் என்பதற்கு வரலாற்று ரீதியிலான பண்பு உருவாகியிருக்கிறது. அதோடு, கதாபாத்திரங்களின் வாழ்க்கை என்பது காலத்தால், தேதிகளால்தான் குறிக்கப்படுகிறது.

பால்ஸாக்கால் தோற்றுவிக்கப்பட்ட இதிலிருந்து, நாவல் கலையால் ஒருபோதும் தப்பிச்செல்ல முடியாது. உண்மைக்குத் தொடர்பற்ற தனது கதைகளின் நிகழ்வுகளை கற்பனாப்பூர்வமாக, யதார்த்தத் தோற்றங்களின் அத்தனை விதிகளையும் நிராகரிக்கின்ற கோம்ப்ரோவிச்சு கூட, இதில் இருந்து தப்ப முடியாது. அவருடைய நாவல்கள், காலத்துள் குறிக்கப்படுகின்ற தேதிகளின் வரலாற்றுத்தன்மையுடன் தான் நிகழ்கிறது. ஆனால், இரண்டு விஷயங்களை இதற்குள் குழப்பிக்கொள்ளக்கூடாது. ஒருபுறம் மனித இருத்தலியலின் வரலாற்றுப் பரிமாணத்தை ஆராய்வது, மற்றொன்று, குறிப்பிட்ட ஒரு வரலாற்றுத் தருணத்தின் சித்தரிப்பு, குறிப்பிட்ட காலத்திலான சமூகத்தைப் பற்றிய விவரிப்பு, அதாவது நாவலுக்கு உரிய வரலாற்றின் வரலாறு. உங்களுக்கு இவ்வகை நாவல்களின் அறிமுகங்கள் முன்னதாகவே போதுமான அளவில் இருக்கின்றன. பிரெஞ்சுப் புரட்சி பற்றிய நாவல்கள், மேரி அண்டோனைட் பற்றிய நாவல்கள், 1914ஆம் வருடத்தைப் பற்றிய நாவல்கள், ரஷ்யாவின் கூட்டுப்படுத்தல்கள் பற்றிய (ஆதரவாகவோ அல்லது எதிராகவோ) நாவல்கள், அல்லது 1984ஆம் வருடத்தைப் பற்றிய நாவல்கள்.



நாவல் மொழிக்குள் உருமாற்றம் செய்யப்பட்டிருக்கும் இத்தகைய நாவல் தன்மைக்குப் பொருத்தமில்லாத அறிவு சேகரம்கூட, மிகுதியான புகழை அடைந்திருந்திருக்கிறது. ம்ம்ம் புரோச்சை பற்றித் திரும்பத் திரும்ப சொல்வதில் எனக்குச் சோர்வே ஏற்படாது: நாவல் பிறப்பதற்கு ஒற்றை காரணமாக அமைவது என்னவென்றால், தன்னால் மட்டுமே சொல்ல முடிகின்ற ஒன்றை சொல்லிவிட வேண்டும் என்பதற்காகவே.

*ஆனால், குறிப்பாக வரலாற்றைப் பற்றி நாவல் என்ன சொல்ல முடியும்? அல்லது உங்களது வரலாற்று அணுகுமுறை என்பது எப்படிப்பட்டது?*

என்னுடைய சில கொள்கைகளை இங்கு பகிர்ந்துகொள்கிறேன்.

முதலாவது கொள்கை: நான் கையாளும் அனைத்து வரலாற்று தருணங்களையும் சிறப்பான தொரு பொருளாதார கண்ணோட்டத்தோடே உருவாக்குகின்றேன். ஒரு அரங்க வடிவமைப்பாளரைப் போல, செயல்களுக்கு இன்றியமையாததாக இருக்கும் சில விஷயங்களை உள்ளடக்கிய சுருங்கிய வடிவத்திலான அரங்கத்தை உருவாக்குபவனைப் போலவே, வரலாற்றை நான் அணுகுகிறேன்.

இரண்டாவது கொள்கை: வரலாற்றுச் சூழ்நிலைகளைப் பொறுத்தவரையில், எனது கதாபாத்திரங்களுக்கு இருத்தலியல் சிக்கல்களை உருவாக்கும் கச்சிதமான பாத்திரங்களை மட்டும்தான் நான் உருவாக்குகிறேன். உதாரணத்திற்கு, The Jokeல் லுட்விக் தனது நண்பர்களும் சக பயணிகளும் துளி சங்கடமும் இல்லாமல், வெகு இயல்பாக, பல்கலைகழக்கத்தில் இருந்து அவன் வெளியேற்றப்படுவதற்காக, அவனது வாழ்க்கையே கவிழ்க்கப்போகும் செயலுக்காக, கை தூக்கி தமது ஆதரவைக் கொடுப்பதைப் பார்க்கிறான். தேவையேற்பட்டிருந்தால், அவனைத் தூக்கிலிடுவதற்குக்கூட, அவர்கள் இதேவகையில் மிக எளிதாக, தங்களது கைகளை உயர்த்தியிருப்பார்கள் என்பதில் அவனுக்கு நிச்சயம் ஏற்படுகிறது. அதனால், மனிதர் பற்றிய அவனது விவரணை என்பது: எந்த தருணத்திலும் தமது சக மனிதரை மரணத்திற்கு அனுப்பத் தயங்காதவர்கள். லுட்விக்கின் அடிப்படையான மானுடவியல் அனுபவம் இவ்வகையில் வரலாற்றின் வேர்களைக் கொண்டிருக்கிறது. ஆனால், வரலாற்றை மட்டுமே விவரித்தல் என்பது (கட்சிகளின் பங்களிப்பு, தீவிரவாதத்துக்கு அடித்தளம் அமைத்துக்கொடுக்கும் அரசியல், சமூக நிறுவனக் குழுக்கள்) எனக்கு ஆர்வத்தைக் கொடுப்பதில்லை. அத்தகைய விவரிப்புகளை எனது நாவல்களில் உங்களால் பார்க்கவும் முடியாது.

மூன்றாவது கொள்கை: வரலாற்றியல் என்பது சமூகங்களின் வரலாற்றைத்தான் எழுதுகின்றனவே தவிர, தனிமனித வரலாற்றை அவை எழுதுவதில்லை. அதனால், என்னுடைய நாவல்களில் பேசப்படும் வரலாற்றுத் தருணங்களை, வரலாற்றாளர்கள் கருத்தில் எடுத்துக்கொள்வதில்லை. எடுத்துக்காட்டாக, செக் குடியரசு மீதான ரஷ்யப் படைகளின் ஆக்கிரமிப்பு நிகழ்ந்த 1968க்கு பிறகான வருடங்களில், மக்களுக்கு எதிரான பயங்கரவாத ஆட்சி, அதிகாரப்பூர்வமாக ஒருங்கிணைக்கப்பட்ட நாய்களின் கொன்று குவிப்பு நிகழ்வின் தொடர்ச்சியாக உருவானது. ஆனால், இந்த சம்பவம் வரலாற்றாளர்களுக்கும் சமூகவியல் அறிஞர்களுக்கும் முக்கியத்துவமற்றதாக இருந்ததால், கிட்டதட்ட முற்றிலும் மறக்கப்பட்டுவிட்டது. எனினும் இத்தருணம் மிகுந்த மானுடவியல் முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாகும். இந்த ஒரு பகுதியை மட்டும் ஒரு வரலாற்று சான்றாதாரமாக எனது The Fairwell Partyல் பயன்படுத்தியிருக்கிறேன்.

மற்றொரு உதாரணம் Life is Elsewhereன் முக்கியத்துவம் வாய்ந்த ஒரு தருணத்தில், வரலாறு குறுக்கீடு செய்கிறது. அழகற்ற மற்றும் இழிவாகத் தோற்றமளிக்கூடிய இரட்டை உள்ளாடையின் தோற்றத்தில் அது வருகிறது. அந்த சமயத்தில் வேறு யாரும் இருப்பதில்லை. தனது வாழ்க்கையின் அழகான பாலியல் வேட்கைக்குரிய தருணமாக அந்த சமயத்தைக் கருதும் ஜெரோமில், தான் உள்ளாடையில் மிகவும் கேவலமாக தோற்றமளிப்போம் என்கிற அச்சத்தின் காரணமாக, தனது உடைகளைக் கலைப்பதில்லை. அதற்குப் பதிலாக, அங்கிருந்து வேகமாக ஓட்டம் பிடிக்கிறான். செயலற்றத் தன்மை! முற்றிலுமாக மறக்கப்பட்டுவிட்ட மற்றுமொரு முக்கியத்துவம் வாய்ந்த வரலாற்றுச் சூழ்நிலை. அதோடு கம்யூனிஸ்ட் ஆட்சியின் கீழ் வாழ நிர்ப்பந்திக்கப்பட்ட மனிதனுக்கு இதுவொரு முக்கியத்துவம் வாய்ந்த சிக்கலே ஆகும்.

ஆனால், எனது நான்காவது கொள்கைதான் இவையெல்லாவற்றையும் விட மேலும் ஆழமாக ஊடுருவிச் செல்கிறது. வரலாற்று தருணங்கள் மட்டுமே புதிய இருத்தலியல் சிக்கல்களை ஒரு கதாபாத்திரத்திற்கு நாவலில் உண்டாக்கிவிடுவதில்லை. மாறாக, வரலாறு அதன் முழு அளவிலேயே ஒரு இருத்தலியல் காலகட்டமாக உணரவும் ஆராயப்படவும் வேண்டும். எடுத்துக்காட்டாக, The Unbearable lightness of being-ல் அலெக்ஸாண்டர் டூபெக்-ரஷ்ய இராணுவத்தால் கைது செய்யப்பட்டதற்குப் பிறகு, கடத்தப்பட்டு, சிறையில் அடைக்கப்பட்டு, மிரட்டப்பட்டு, ப்ரெஸ்னவ்வுடன் உடன்படுமாறு அழுத்தம் கொடுக்கப்பட்டு - ப்ராகுக்கு திரும்பி வருகிறான். அவன் வானொலியில்

பேசுகிறான். ஆனால், அவனால் தொடர்ச்சியாகப் பேச முடிவதில்லை. அவனுக்கு மூச்சுத் திணறல் ஏற்படுகிறது. பேசிக்கொண்டிருக்கும்போதே இதனால் அவ்வப்போது அமைதியாகிவிடுகிறான். இந்த வரலாற்றுப் பகுதி எனக்கு எதனை வெளிப்படுத்துகிறது என்றால் (இந்த பகுதி முற்றிலுமாக மறக்கப்பட்டுவிட்டது. ஏனெனில் இரண்டு மணி நேரத்திற்குப் பிறகு, வானொலி தொழிற்நுட்ப வல்லுநர்கள் அவருடைய குரலில் உண்டாகிய வலி மிகுந்த அமைதியான தருணங்களை நீக்க வேண்டியிருந்தது) அவனுடைய பலவீனத்தை. பலவீனம் என்பது இருத்தலியலில் மிக பொதுவான ஒரு வகைப்பாடு: 'அதிகார வர்க்கத்தின் முன்னால் எந்தவொரு மனிதனும் பலவீனமானவன்தான், அவனுக்கு டூபெக்கைப்போல ஒரு தடகள விளையாட்டாளனுக்குரிய உடற்கட்டு இருந்தாலும்கூட'. ஆனால், தெரேசாவல் அவனுடைய பலவீனத்தின் பிரத்தியேக பண்பு கூறுகளை ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அது அவளின் மீது அழுத்தத்தை ஏற்படுத்துவதோடு, அவமானப்படுத்தவும் செய்கிறது. அதனால், அவனிடமிருந்து விலகிச் செல்லலாம் என்றும் கருதுகிறாள். ஆனால், தாமஸின் துரோகங்களை எதிர்கொள்ளும்போது, ப்ரெஸ்னவ்வை எதிர்கொண்ட டூபெக்கின் நிலையில்தான் அவள் இருக்கிறாள்: கையாளாகத்தன்மையிலும் பலவீனமாகவும்.

அதோடு, உங்களுக்கு முன்னதாகவே வெர்டிகோ என்றால் என்னவென்பது தெரியும்: தனது பலவீனத்தின் மீதே போதையில் இருப்பதும் வீழ்ச்சியின் மீது பேராவல் கொண்டிருப்பதும். தெரேசா உடனடியாக அதனைப் புரிந்துகொள்கிறாள், 'அவள் பலவீனமானவர்களில் ஒருத்தி, பலவீனமானவர்களின் குழுவில் அங்கத்தினள், பலவீனமானவர்களின் தேசத்தில் அவளும் ஒரு பிரஜை. அதோடு அவள் பிரத்தியேகமாக அவர்களுக்கு நன்றியுணர்ச்சியுடன் இருப்பவளாக இருக்கவேண்டும். ஏனெனில், அவர்களும் பலவீனமானவர்கள், தனது உரையாடலில் அவ்வப்போது சுவாசத்திற்காகத் திணறியவர்கள்'. அப்படி, பலவீனத்தின் மீது போதையுடன் இருப்பதால், அவனிடமிருந்து விலகி மீண்டும் அவள் ப்ராக் எனும் 'பலவீனர்களின் நகரத்திற்கு' திரும்புகிறாள். இங்கு வரலாற்று நிகழ்வுகள் என்பது பின்னணியில் மட்டும் இடம்பெறுவதில்லை. மனித சூழல்களில் வெளிப்படும் ஒரு அரங்கமாக மாறியிருக்கிறது. ஆக, அங்கே வரலாறே மனித சூழ்நிலையாக இருக்கிறது, வளரும் இருத்தலியல் சூழலாக.

போலவே, The Book of Laughter and Forgetting-ல் ப்ராகின் வசந்த காலப் பகுதி அதனது அரசியல் - வரலாற்று - சமூகவியல் பார்வையில் எழுதப்படாமல், அடிப்படையான இருத்தலியல் தருணத்தின்படியே எழுதப்பட்டிருக்கிறது. ஒரு மனிதன் (பல தலைமுறைகளின் மனிதன்) செயல்படுகிறான் (ஒரு புரட்சியைத் தோற்றுவிக்கிறான்), ஆனால், அவனது செயல்கள் அவனது கட்டுப்பாட்டில் இருந்து நழுவுகிறது, அவனுக்கு கீழ்ப்படிய மறுக்கிறது (புரட்சி பெரு நெருப்பாக மாறி மரணத்தையும் அழிவையும் உண்டாக்குகிறது); அதனால், அவன் மீண்டும் தனது கட்டுக்குள் கொண்டுவரவும் கீழ்ப்படியாத செயல்களை அடக்கவும் முயல்கிறான் (ஒரு புதிய தலைமுறை எதிர்ப்பை உருவாக்குகிறார்கள், சீர்திருத்தவாத இயக்கம்). ஆனால், அது பயனற்றுப் போகிறது. ஒருமுறை நம் கையில் இருந்து நழுவிவிட்டது என்றால், மீண்டும் அதனைக் கைப்பற்றவே முடியாது.

ஜாக்குவஸ் லெ பெடலிஸ்டே குறித்து நமது உரையாடலின் தொடக்கத்தில் நீங்கள் குறிப்பிட்ட அதே தருணத்தை நினைவூட்டுகிறது.

ஆனால், இந்த நேரத்தில், வரலாற்றுத் தருணங்களின் தொகுப்புப் பற்றியே நான் குறிப்பிடுகிறேன்.

*உங்களது நாவல்களை புரிந்துகொள்வதற்கு, செக் குடியரசின் வரலாற்றை அறிந்திருக்க வேண்டியது அவசியமா?*

இல்லை. என்னவெல்லாம் தெரிந்திருக்க வேண்டுமோ அதனையெல்லாம் நாவல் தம்மளவிலேயே கொண்டிருக்கும்.

*நாவல் வாசித்தல் என்பது வரலாற்று அறிவை அடைவதும்தான் என்பதில்லையா?*

நம்மிடம் ஐரோப்பியாவின் மொத்த வரலாறும் இருக்கிறது. 1000ஆமாவது வருடத்தில் தொடங்கி, நமது காலகட்டம் வரையிலும் ஒற்றைய பொதுவான அனுபவமாகவே வரலாறு நமக்கு இருக்கிறது. நாம் எல்லோரும் அதன் பகுதியாகவே இருக்கின்றோம் என்பதோடு, நமது ஒவ்வொரு சிறு அசைவும் தனிநபர்களுடையதாக இருந்தாலும் சரி, தேசியளவிலான நடவடிக்கைகளாக இருந்தாலும் சரி, இந்த சந்தர்ப்பத்தில் வைத்துப் பார்க்கும்போது, அதனது அதி முக்கியத்துவத்தை மட்டுமே வெளிப்படுத்துவதாக இருக்கிறது. என்னால் ஸ்பெயினின் வரலாற்றை அறியாமலேயே, டான் குஹேட்டேவை புரிந்துகொள்ள முடிகிறது. அதே வேளையில், என்னால் சில பொதுவான யோசனைகளின்றி, அதனைப் புரிந்துகொள்ள முடியாது என்பதும் உண்மையே. தீரச்செயல்களின் காலத்தின் மீதான ஐரோப்பிய வரலாற்று அனுபவம், நீதிமன்றத்தின் மீதான காதல், அதோடு இடைக்கால பகுதியில் இருந்து நவீன காலத்திற்கு அது இடம்பெயர்ந்தது உள்ளிட்டவை சார்ந்த புரிதல்கள் எனக்கு இருக்க வேண்டும்.

*Life is Elsewhere நாவலில், ஜெரோமில் வாழ்க்கையின் ஒவ்வொரு நகர்வும் ரிம்பாட், கீட்ஸ், லெர்மொண்டோவ் போன்றோரது வாழ்க்கையின் சிறு சிறு பகுதிகளுக்கு எதிராக அமைக்கப்பட்டிருப்பதாக தெரிகிறது. ப்ராகில் வருகின்ற முதல் மே அணிவகுப்பு, 1968இல் பாரீஸில் நிகழ்ந்த மாணவர் போராட்டங்களுடன் இணைந்து குழப்புவதாக இருக்கிறது. இவ்வகையில், ஐரோப்பியாவின் ஒட்டுமொத்தத்தையும் உள்ளடக்கிய ஒரு காட்சித் தொகுப்பை உங்களது நாயகனுக்காக நீங்கள் உருவாக்கியிருக்கிறீர்கள். இருப்பினும் உங்களது நாவல் ப்ராகில் நிகழ்த்தப்படுகிறது. 1948இல் நடந்த கம்யூனிஸ வன்முறையுடன் முடிவடைகிறது.*

என்னை பொறுத்தவரையில், ஒரு அமுக்கப்பட்ட வடிவத்தில், ஐரோப்பியப் புரட்சியைப் பற்றிப் பேசும் நாவலே அது.

*ஐரோப்பியப் புரட்சி - அந்த வன்முறையா? அதோடு*

## தனது எதிர்வருகின்ற வீழ்ச்சியை, நம்மில் பலருக்கும் அது தெரிந்துவிடும், நாம் ஒருவேளை அதற்காக வருந்தவும் செய்யலாம். ஆனால், அந்த கடுந்துயரம் நம்மை நெருங்கி வருகின்றபோது, நாம் முன்னதாக வேறு திசையில் கவனத்தைச் செலுத்தத் தொடங்கியிருப்போம்.

*திணிக்கப்படுவது? மேலும் அது மாஸ்கோவில் இருந்து இறக்குமதி செய்யப்படுவது?*

ஆயினும் அது நம்பகத்தன்மை இல்லாததாகத் தோன்றினாலும் அந்த வன்முறை என்பது புரட்சியாகத்தான் அனுபவம் கொள்ளப்பட்டது. அதனுடைய சொல்லாட்சியும் மாயையும் அனிச்சைத்தன்மையும் செயல்பாடுகளும் குற்றங்களும் ஐரோப்பியப் புரட்சிகர கலாச்சாரத்தின் ஒரு சிறிய உருவிலான பகடியாகவே இன்றைக்கு எனக்குத் தோன்றுகிறது. ஐரோப்பியப் புரட்சிகர காலகட்டத்தின் தொடர்ச்சியாகவும் கோரமான முழுமையுமாகவே எனக்குப்படுகிறது. அந்த புத்தகத்தின் நாயகனைப்போலவே, ஜெரோமில் - விக்டர் ஹுகோ மற்றும் ரிப்பாடின் தொடர்ச்சி-ஐரோப்பிய கவிபுலத்தின் கோரமான நிறைவேற்றமாகவே அது இருக்கிறது. அதோடு, The Joke நாவலில் வருகின்ற ரெரோஸ்லாவ், கலை, அழிவை எய்திக்கொண்டிருக்கும் காலத்தில், பழங்காலத்தின் பிரபல கலை மரபின் தொடர்ச்சியாக வருகிறான். Laughableloves-ல் வருகின்ற மருத்துவர் ஹவல், டான் ஜுவானிசம் சாத்தியமே இல்லாத ஒரு காலத்தில் டான் ஜுவனாக வருகின்றவனே. The Unbearable lightness of being-ல் வருகின்ற பிரான்க், ஐரோப்பிய இடதுசாரிகளின் மாபெரும் மார்ச் கிளர்ச்சியின் கடைசி மனச்சோர்வின் எதிரொலியாக வருகிறான். மற்றும் பொஹேமியாவில் (Bohemia) இருக்கின்ற தனது தெளிவற்ற கிராமத்தில் இருக்கும் தெரேசா தனது நாட்டின் அனைத்துவிதமான பொது வாழ்க்கைகளில் இருந்து மட்டும் வெளியேறுவதில்லை, 'இயற்கையை உரிமம் கொண்டாடியபடியே முன்னோக்கி நகர்கின்ற மனிதக்குலம் பயணிக்கும் பாதையில்' இருந்தும் அவள் வெளியேறுகிறாள். மேற்குறிப்பிட்டுள்ள அனைத்து கதாபாத்திரங்களும் தங்களது தனிப்பட்ட வரலாறுகளை மட்டும் பூர்த்தி செய்வதில்லை; அதனோடேயே, ஐரோப்பிய அனுபவத்தின் மேலதிக வரலாற்றையும் பூர்த்தி செய்துவிடுகின்றன.

*அப்படியெனில், உங்களது நாவல்கள் நவீனத்துவ காலத்தின் இறுதி செயல்பாடுகளின்போது நிகழ்த்தப்படுகிறது. நீங்கள் அதனை, 'கடைசி முரண்பாடுகளின் காலம்' என்று அழைக்கிறீர்கள்.*

நீங்கள் விரும்பினால். ஆனால், தவறாகப் புரிந்துகொள்ளப்படுவதை நாம் தவிர்த்துவிடலாம். Laughable lovesல் ஹவல்லின் கதையை நான் எழுதியபோது, டான் ஜுவானிசத்தின் சாகசங்கள் முடிவை நோக்கிப் பயணித்துக்கொண்டிருந்த தருணத்தில் ஒரு டான் ஜுவானை விவரிக்க வேண்டும் என்கிற எந்த நோக்கத்தையும் நான் கொண்டிருக்கவில்லை. நகைச்சுவையாக எனக்குத் தோன்றிய ஒரு கதையைத்தான் நான் எழுதிக் கொண்டிருந்தேன். அவ்வளவுதான். இந்த இறுதியான முரண்பாடு, வேறு பிரதிபலிப்புகள் போன்றவற்றை எல்லாம் முன்னதாகவே தீர்மானித்துக்கொண்டு எழுதுவதில்லை. அவை தம்மளவில் பிற்பாடு வந்து சேர்ந்துகொள்கின்றன. The Unbearable lightness of being நாவலை எழுதிக் கொண்டிருக்கும்போதுதான் - உலகத்துடனான தங்களது உறவைத் துண்டித்துக்கொள்வதில் ஆர்வமாக இருக்கும் எனது கதாப்பாத்திரங்களின் மீது உத்வேகம் பெற்று - டெஸ்கார்டஸின் (Descartes) பிரபலமான சூத்திரத்தின் விதியை நினைத்துக்கொண்டேன்: இயற்கையை உரிமம் கொண்டாடும் அதனை தன் ஆளுகைக்கு உட்படுத்தும் மனிதன்; அறிவியல் மற்றும் தொழிற்நுட்பத் துறையில் உண்டாகிய அற்புதங்களால், 'உரிமையாளர் என்றும் அனைத்திற்கும் தலைவன்' என்றும் தன்னை கருதுபவன்; திடீரென, தனக்கு எதுவும் சொந்தமில்லை என்பதை உணருகிறான், அவன் இயற்கைக்கும் அதிபதி இல்லை (அது கொஞ்சம் கொஞ்சமாக நமது உலகத்தில் இருந்து மறைந்துகொண்டே வருகிறது), வரலாற்றிற்கும் தலைவன் அல்ல (அவனுடைய பிடியில் இருந்து அது நழுவிச் சென்றுவிட்டது), அவனது சுயத்துக்குக்கூட அவன் உரிமடையுடைவன் அல்ல (அவன் தனது ஆன்மாவின் பகுத்தறிவற்ற விசையால் முன்னிழுத்துச் செல்லப்படுகிறான்). ஆனால், ஒருவேளை கடவுளும் விடைபெற்றுச் சென்றபிறகு, அவனும் ஒன்றும் அதிபதி அல்ல என்றாகும்போது, யார்தான் இங்குத் தலைவர்? இவ்வுலகம் அத்தகைய தலைவன் இல்லாமல், வெறுமையுடனூடேயே நகர்ந்து கொண்டிருக்கிறது. அங்குதான் பொறுத்துக்கொள்ள முடியாத வகையிலான இருப்பின் இலகுத்தன்மை வருகிறது.

*இருப்பினும் தற்போதைய நேரத்தை முக்கியத்துவம் வாய்ந்த அசைவியக்கமாக, அதாவது அனைத்துவிதமான காலகட்டங்களையும் கடந்ததொரு முக்கிய தருணமாக - அதாவது, இறுதி காலக்கட்டமாக பார்ப்பது ஒரு தன்முனைப்புள்ள கானல் நீர் போன்ற பொய் தோற்றமாக இருக்கிறது அல்லவா? எத்தனையோ முறை ஐரோப்பா தனது அந்திம காலத்தினூடாக வாழ்ந்து வருகிறது என்று சொல்லப்பட்டிருக்கிறதே!*

அனைத்து இறுதிக்கட்ட முரண்பாடுகளிலும் முடிவுகளில் ஒன்று இருக்கவே செய்கிறது. ஒரு குறிப்பிட்ட நிகழ்வு முன்கூட்டியே முன்னறிவிக்கப்படுகின்றபோது, அதாவது தனது எதிர்வருகின்ற வீழ்ச்சியை, நம்மில் பலருக்கும் அது தெரிந்துவிடும், நாம் ஒருவேளை அதற்காக வருந்தவும் செய்யலாம். ஆனால், அந்த கடுந்துயரம் நம்மை நெருங்கி வருகின்றபோது, நாம் முன்னதாக வேறு திசையில்

கவனத்தைச் செலுத்தத் தொடங்கியிருப்போம். சாவு கண்களுக்குப் புலப்படாததாக ஆகிறது. நதிகளும் நைட்டிங்கேல் பறவையும் வயல்வெளிகளின் ஊடாக ஊர்ந்துச் செல்லும் பாதைகளும் மனித மனங்களில் இருந்து மறைந்து இப்போது சில காலம் ஆகிவிட்டது. இயற்கையே நமது பூமியில் இருந்து நாளை மறைந்துவிடும் என்றால், யார் அதனைக் கவனித்துக்கொண்டு இருப்பார்கள்? ஆக்டோவியா பாஸையும் ரெனெ சாரையும் (Rene Char) பின்பற்றி வந்தவர்கள் எங்கே? மிகச் சிறந்த கவிஞர்கள் இப்போது எங்கே சென்றார்கள்? அவர்கள் எல்லாம் இப்போது மறைந்துவிட்டார்களா? அல்லது அவர்களது குரல் மட்டும் கேட்க முடியாததாக ஊமையாகிவிட்டதா? நம்முடைய வழக்கையே எடுத்துக்கொள்வோம். கவிஞர்கள் இல்லாத நிலவெளியை கற்பனை செய்துகூடப் பார்க்க முடியாது என்றிருந்த ஐரோப்பா இன்று மாறிவிட்டது. ஒருவேளை, கவிதைகளுக்கான தேவையை மனிதன் தொலைத்துவிட்டால், எப்போது அது அழிந்துபோனது என்பதை அவன் கவனிப்பானா? முடிவு என்று சொல்வது, ஒட்டுமொத்தமான பேரழிவை அல்ல. முடிவைப்போல அமைதியான வேறெதுவும் நிகழ முடியாது.

*ஒப்புக்கொள்கிறேன். ஆனால், ஒரு விஷயம் அழிவை எய்துகிறது என்றால், மற்றொன்று தோன்றியிருக்கிறது என்றுதானே அர்த்தம்?*

நிச்சயமாக.

*ஆனால், அந்த தொடக்கம் என்றால் என்ன? உங்களுடைய நாவல்களில் அதனைப் பார்க்கவே முடியவில்லையே. இங்குதான் ஒரு சந்தேகம் எழுகிறது, வரலாற்றுத் தருணங்களின் ஒரு பகுதியை மட்டும்தான் நீங்கள் பார்க்கிறீர்களோ?*

அப்படியும் இருக்கலாம். ஆனால், அது கல்லறைக்கு ஒப்பானது அல்ல. பதிலாக, நாவல் என்றால் என்ன என்பதைப் புரிந்துகொள்வது ரொம்பவும் முக்கியமானது. ஒரு வரலாற்று ஆய்வாளன், நடந்த நிகழ்வுகளைப் பற்றி உங்களுக்கு எடுத்துக் கூறுவான். ஆனால், அதற்கு நேரெதிராக, ரஸ்கல்னிகவ்வின் (குற்றமும் தண்டனையும் நாவலில்) குற்றம் பகல்வெளிச்சத்தை ஒருபோதும் பார்த்ததில்லை. ஒரு நாவலின் பண்பு என்பது வாழ்க்கையை ஆராய்வதில்லை. மாறாக, இருத்தலையே அது விசாரணைக்குள்ளாக்குகிறது. அதோடு, இருத்தல் என்பது என்ன நடந்தது என்கிற தகவல்களில் இருப்பதில்லை. இருத்தல் என்பது மனித சாத்தியங்களின் எல்லைகளை ஆராய்வது, மனிதன் எதனாலெல்லாம் உருவாகியிருக்கிறான், எதையெல்லாம் அவனால் செய்ய முடியும் என்பதை ஆராய்வதே இருத்தலியல் என்பதாகும். இதனையோ அல்லது மனித சாத்தியங்களையோ கண்டுபிடித்து நாவலாசிரியர்கள் இருத்தலியலுக்கான ஒரு வரைபடத்தை உருவாக்குகிறார்கள்.

மறுபடியும் இருப்பது என்பது: 'உலகத்துள் இருப்பதே'. கதாபாத்திரத்தையும் அவனது உலகத்தையும் 'சாத்தியங்கள்' என்கிற அளவிலேயே புரிந்துகொள்ள வேண்டும். காஃப்காவில் அனைத்தும் தெளிவாக இருக்கிறது: காஃப்காவியன் உலகம் என்பது நாம் அறிந்த யதார்த்த உலகத்தைப்போல இருப்பதில்லை, மாறாக, மனித உலகத்தின் அதீதமான, இதுவரையிலும் உணர்ந்திருக்காத சாத்தியங்களின் உலகமே அது. இந்த சாத்தியங்கள் என்பது நமது யதார்த்த உலகத்தின் பின்னால் இருந்து ஒருவித மயக்கத்தைத் தோற்றுவிக்கிறது என்பது உண்மைதான் என்றாலும் நமது எதிர்காலம் பற்றிய முன்னறிவிப்பாகவும் இது தெரிகிறது. அதனால்தான், காஃப்காவிடத்தில் இருக்கின்ற இந்த தீர்க்கதரிசன பண்புகளைப் பற்றி அவர்கள் பேசுகிறார்கள். ஆனால், அவருடைய நாவல்களில் அவைகளைப் பற்றி தீர்க்கதரிசனப் பார்வைகள் இல்லையென்றாலும் அவை தமது மதிப்பீட்டை இழந்துவிடாது, ஏனெனில், அவை இருத்தல் பற்றிய ஒரு சாத்தியத்தைக் கைப்பற்றி வைத்திருக்கின்றன. (மனிதனுக்கும் அவனது உலகத்துக்குமான சாத்தியம்). அதன்வழியே நாமெல்லாம் யார் என்பதையும் நம்மால் என்னவெல்லாம் சாத்தியம் என்பதையும் பார்க்கத் தூண்டுகின்றன.

*ஆனால், உங்களுடைய நாவல்கள் முற்றிலும் யதார்த்தமான உலகத்தின் மீதுதான் மையங்கொண்டிருக்கின்றன.*

புரோச்சின், The Sleepwalkers-ஐ நினைத்துப் பாருங்கள். முத்தொகுப்பு நாவலான அதில் ஐரோப்பியாவின் முப்பதாண்டுக் கால வரலாறு பதிவாகியிருக்கிறது. புரோச்சைப் பொறுத்தவரையில், வரலாறு என்பது நிரந்தரமாக சிதைக்கப்பட்ட மதிப்பீடுகளின் விளக்கங்களாகும். கூண்டுக்குள் சிறை வைக்கப்பட்டிருப்பதைப்போல, இந்த செயல்முறையில் கதாபாத்திரங்கள் பூட்டி வைக்கப்பட்டு, அதன் தொடர்ச்சியாக பொதுவான மதிப்பீடுகளின் அழிவை வெளிப்படுத்தும் வகையில், அவர்கள் வாழ்க்கைக்கான வழிமுறைகளைத் தேடும் விதமாக அந்த நாவல் எழுதப்பட்டிருக்கிறது. உறுதியாகவே, புரோச்சும் தனது வரலாற்றின் தீர்மானங்கள் சரிதான் என்பதில் திருப்தியுடையவராகவே இருந்தார். தான் விவரித்துக்கொண்டிருக்கும் உலகம் பற்றிய சாத்தியங்கள் அனைத்தும் உண்மையாகவே நடைமுறைக்கு வரும் வாய்ப்பு இருக்கிறது என்பதில் அவருக்கு நம்பிக்கை இருந்தது.

ஆனால், புரோச் தவறாக புரிந்துகொண்டார் என்றும் அவர் வெளிப்படுத்திய சிதைவு செயல்முறைக்கு இணையாகவே மற்றொரு சாதகமான வளர்ச்சி நிலை இருந்திருக்கிறது என்றும் அதனைப் பார்க்க புரோச் தவறிவிட்டார் என்றும் நாம் கற்பனை செய்து பார்க்கலாம். அது எந்த வகையிலாவது The Sleepwalkers கொண்டிருக்கும் மதிப்பீடுகளை மாற்றிவிடப் போகிறதா?. நிச்சயமாக இல்லை. ஏனெனில், இத்தகைய மதிப்பீடுகளின் சிதைவு செயல்பாடு என்பது, மனித உலகின் மறுக்கவே முடியாத சாத்தியமாகும். இந்த செயலாக்கத்தின் சுழலில் மனிதன் சிக்கிக்கொள்வதையும் அவனது சைகைகளையும் அவனது மனப்பான்மையையும் புரிந்துகொள்ள, இது இன்றியமையாதது ஆகும். இருத்தலின் அறியப்படாத புதிய பிரதேசத்தையே புரோச் கண்டுபிடித்திருக்கிறார். இருத்தலின் பிரதேசம் என்பது இருத்தலின் சாத்தியங்களைக் குறிப்பதே ஆகும். அந்த

சாத்தியங்கள் யதார்த்தத்தில் நிகழ்கிறது, நிகழவில்லை என்பதெல்லாம் இரண்டாம்பட்சமான கருத்துக்களே.

உங்களது நாவல்கள் மையங்கொண்டிருக்கும் இறுதி முரண்பாடுகளின் காலம் என்பதை யதார்த்தம் என்பதாக அல்லாமல், சாத்தியங்கள் என்பதாகவே கருத வேண்டும். அப்படித்தானே?

ஐரோப்பாவுக்கான ஒரு சாத்தியம். ஐரோப்பாவுக்கு சாத்தியமான ஒரு பார்வை. மனிதனுக்குச் சாத்தியமான ஒரு சூழ்நிலை.

யதார்த்தத்தை அல்லாமல் சாத்தியங்களைத்தான் கைப்பற்ற நீங்கள் முயல்கிறீர்கள் என்றால், ப்ராக் பற்றி நீங்கள் உருவாக்கும் சித்திரத்திற்கு ஏன் முக்கியத்துவம் கொடுக்க வேண்டும்? உதாரணத்திற்கு, அதில் நிகழும் சம்பவங்களுக்கு ஏன் முக்கியத்துவம் கொடுக்க வேண்டும்?

ஒரு வரலாற்றுச் சூழ்நிலையை, ஒரு எழுத்தாளர் புதியதாகவும் மனித உலகத்தை வெளிப்படுத்தும் சாத்தியமாகவும் கருதினார் என்றால், நிச்சயமாக அதனை உள்ளபடியே விவரிக்கவே விரும்புவார். இருப்பினும் நாவலின் மதிப்பீட்டைப் பொறுத்தவரையில், வரலாற்று யதார்த்தத்தின் மீதான நம்பகத்தன்மை என்பதெல்லாம் இரண்டாம்பட்சமானதுதான். நாவலாசிரியன் ஒரு வரலாற்று ஆய்வாளனோ, தீர்க்கதரிசியோ அல்ல. அவன் இருத்தலை விசாரணைக்கு உள்ளாக்குபவன்.

ராம் முரளி <raammurali@gmail.com>

# பாலை நிலவன் கவிதைகள்

**ஓவியம்:** Halisia Hubbard

## 1. பித்த யாத்ரீகர்கள்

ஆபத்தானது
கவிஞர்களின் சேர்க்கை
வாளையொத்த
உடைந்த கண்ணாடிக் கூர்மையுள்ள
தனிமையுடனும்
மழைத்துளியை விட
லேசான
கருணையுடனும்
இந்தக் கவிகளே
அதிகமும் தொடர்பு வைத்திருக்கிறார்கள்
அவர்களுடைய தோகையில்
சர்ப்பமென சதா நெளியும்
ஓவிய நுட்பம்
சாம்பலில் புகையும்
கண்களுக்குள்
வழிவதில்லை
வனாந்தர நிழலின்
குழந்தைகளான
கவிஞர்களின் சேர்க்கை
பசியை
மேலும்
இரண்டு கல் அடுப்பில்
எரியூட்டி
நமது குடலை அதில் வைத்து
தைக்கிறது
கவிஞர்கள்
பூமியில்
நகைப்புக்குரிய முறையில்
வாழக்கூடியவர்களென்பதால்
அவர்களுடைய
சட்ட திட்டங்களை
கர்ப்பத் தோட்டத்து
பனிமலர்களை நறுமணந்து
கடல் நீரில் மிதந்தலைந்து
கனவு கொள்ளும்
குருதி பூத்த
சிசுக்களே அறிவார்கள்
கவிஞர்கள்
தங்கள் இறக்கைகளை வானில் வீசி
எலும்பு பூட்டிய கால்களை
சதாவும் முறிப்பவர்களென்பதால்
அவர்களுடைய சேர்க்கை
பயங்கரமானது
அவர்களுக்கு
மாம்ச உடலில்லையென்பதனால்
காலத்தின்
புதைகுழியை
ஜாமத்திலும்
விடாமல் தோண்டுவார்கள்
கவிஞர்கள்
கடற்கரை வாசிகள்
புதையுண்ட நகரத்தின் மோகிகள்
இருள் நக்கிகள்
வெயில் கனலும் ஏரியில் மிதப்பவர்கள்
ஒரு சிரிப்பொலியில்





நகரத்தின்
அடுக்குகளைக் குலைப்பவர்கள்
கவிஞர்கள்
காதலிகளுக்காக
அழுது அடம் பிடித்து
தாய் மொழியிடமே மண்டியிட்டு
சொற்களில் தேனெடுப்பவர்கள்
கவிஞர்கள்
நிராதரவின்
உடையை அணிபவர்கள்
அனாதைகள்
அவர்களின் சேர்க்கை ஆபத்தானது
இடி விழக்கூடிய இடத்தில்
தூங்கி வழிபவர்கள்
வழி தொலைத்தவர்கள்
பாலைவன ஒட்டகங்களின்
திறந்த வாய்களில்
ஒழுகும்
ஜலத்தை ஒத்தவர்கள்
நிலத்தில் கால் பாவி
நடமாடத் தெரியாத
பித்த யாத்ரீகர்கள்
மிகவும்
கொடியது கவிஞர்களின் சேர்க்கை
தாங்கள்
உதித்த கர்ப்ப கிரகத்தை
மறதியிலிட்டு
முத்தமிட்ட மழலையின்
எச்சிலுடனே அலைபவர்கள்
கவிஞர்களின் சேர்க்கை
மீளாத் துயருடையது
அவர்கள்
எல்லோரையும் நடுங்க வைத்து
மரணத்தின்
தோலை
திடீரென அணிபவர்கள்
காலத்தை வம்புக்கிழுத்து
அதன் குரல்வளையை
நசுக்கி எறிபவர்கள்
குத்தீட்டியில்
தங்களையே
பல கூறாகப்பிளந்து
காகங்களுக்குப் படையலிடுபவர்கள்

## 2. தனிமை

எதன் மீதும்
எது
ஆசையற்றிருக்கிறதோ

அதன் மீது
அமரத் துடித்து வந்திருக்கிறது
பட்டாம்பூச்சி
அதன்
பழுப்பு நிறம்
எங்கிருந்து
யாரால்
கையளிக்கப்பட்டதோ
அங்கே
ஒரு கவிஞன்
சூரியனை
வணங்கிக் கொண்டிருக்கிறான்
அந்த மெல்லிய காகிதச் சிறகின்
வண்ணத்தில்
தீட்டப்பட்ட
ஓவியத்திற்கு
யார்
உடைமையாளனோ
அவன் காலடியில்
அதே கவிஞன்
சாகும் வரை விழுந்து கிடப்பான்
அதன்
மிக மிகச் சிறிய
கோதுமை மணி இதயத்தில்
சுவாசத்தை ஊதியது யாரோ
அவர்
மிதிக்கும் இடத்திலெல்லாம்
தன்
உள்ளங்கையை வைப்பவனும்
அதே கவிஞன் தான்
பூமியை
எந்நேரமும்
அழகியலுக்கெனவே
தயார் படுத்த
சிருஷ்டி கொண்டிருக்கும்
ஒரு
துளியூண்டு ஜீவன்
ஆனந்த அனந்தமாய்
வட்டமடித்து
செடியில் அமர்ந்து
ஒரு மஞ்சள் மலரை
முத்தமிட



அதுவுமே
ஒரு பட்டாம்பூச்சி
அம்மலரின்
பற்றற்ற
தன்னந் தனிமை தான்
இதுகாறும்
பட்டாம்பூச்சி
என்ற பெயரில்
வெளியெங்கும்
பறந்து கொண்டிருக்கிறது
தனிமையை
இப்படியொரு வண்ணத்தில்
குழைத்தது
யாரோ
ஒரு ரகசிய யுவதியாகத்தான்
இருக்க இயலும்
அவர்களுக்குத்தான் இது சாத்தியம்
அதன் பொருட்டே
அதே கவிஞன்
பெயரிடப்படாத தியான மலர்களின்
நறுமணத்தை
தன் கவிதைகளில்
மலர்த்தும் போது
ஊர் பேர் தெரியாத
ஒரு யுவதியையும்
பழுப்பு நிற பட்டாம்பூச்சியையும்
ஒன்று போலவே
நினைத்துக் கொள்கிறான்
அவனால் தான்
முற்காலத்தில்
எக்கணமும்
இளநீல வண்ணத்தில்
இருந்த இந்த நிலா
திடீரென
முழு மஞ்சளாகி
ஒவ்வொருவர் பின்னேயும்
அழுது கொண்டே
பெருந் தனிமையில்
அலைய ஆரம்பித்தது.

## 3. அம்மாவின் குழந்தை



என்னைப் போல
கோமாளியை
யாரும் பார்த்திருக்கவியலாது
நானும்
அம்மாவும்
புலிக் குட்டியை
மழை பெய்யும்
ராவில்
கண்டெடுத்து
அம்மா
குழந்தை போலவும்
நான் பொம்மை போலவும்
வளர்த்தி வந்த
அப்பழுக்கற்ற மழலை அது
அதன் குரலில்
ஆரம்ப முதலே எனக்கு
சந்தேகமிருந்தது
பூமியில்
மிகச்சிறிய
உயிர்களை மிகவும்
நம்ப வேண்டுமென்ற
அம்மாவிடம்
நான்
இனிப்பு பண்டங்கள் கேட்டு
அடம் பிடித்தால்
புலி குதறி விடுமென்பாள்
அதன் பற்களும்
நகங்களும் சொல்லவே வேண்டாம்
புலியை
எக்காலத்திலும்
ஒரு பொம்மையாக்கவியலாது
என்பது
அம்மாவின் வாதம்
புலி
என்றாலே
எனக்குக் குலை நடுங்கும்
அதன் உறுமலை
கேள்விப்பட்டிருக்கிறேன்
பயப்படுத்தும் விலங்கை
நேசிக்க வேண்டுமெனில்
அதைவிட
அதிக வலு வேண்டுமென்கிற
அம்மாவின் கெடுபிடி தாங்காமல்
நோஞ்சானான நான்
மழை விடாது
பெய்து கொண்டிருந்த
நாளில்
எனக்குப் பிடித்த
அதன் அழகிய கோடுகளை
கடைசியாக முத்தமிட்டேன்
குரலும் மாறவில்லை
புலியும் வளரவில்லை
ஒரு விசையேனும்
அதன் உறுமலைக் கேட்க வேண்டி
தூர எறிந்ததும்
அது வனத்திற்கு
ஓடிப் போகாமல்
மழையில் நனைந்தபடி
கதவிற்கு வெளியே நின்று
அம்மாவின்
குழந்தை போலவே
மியாவ்
என்கிறது
நான் தான்
புலியாக
அதை நோக்கி
இருமுறை உறுமினேன்

## 4. கனவு

அடுக்குமாடி
இரவுக் காவலர்
தூங்கிச்
சாய்ந்து
திடுக்கிட்டு விழிக்கையில்
படிக்கட்டில்
ஏறுகிறேன்
ஒரு பத்து ரூபா
கிடைக்குமா என்றார்
பர்ஸில் வங்கி அட்டைகள்
எடுத்து வரப் போய்

எப்படி மறந்தேனோ
அதிகாலை
திடுக்கிட்டு விழிக்கிறேன்
மழை பெய்ய
இரவுக் காவலர்
குளிரில்
நடுங்கி
படிக்கட்டில் அமர்ந்து தூங்கிக்கொண்டிருக்கிறார்
ஏராளமான முதலைகள்
தரைத்தளத்தை
சுற்றி வாய் பிளந்து நிற்க
காஃபி மணம்
அறையை
நிரப்பி
அடுக்குமாடிக் கட்டடத்தை
உறை நிலைக்கு அழுத்த
கனவிலிருந்து
ஞாபகத்தை
வெளியேற்றிக் கொண்டிருக்கிறேன்
உடலோ
முதலையின் வாயிலிருக்கிறது

## 5. கடைசி உயிர்

எனக்குக் குருமார்கள் யாருமில்லையென்று
நம்பினாலும்
ஒரே ஒருவர் இருந்தார்
அவர்
ஒப்பாரியை
தாங்குமளவிற்கு
எனது நெஞ்செலும்புகளுக்கு
வலுவில்லாததால்
மறைந்து திரிந்தேன்
சந்திக்கும் போதெல்லாம்
குழந்தைகளுக்கு
பரிசளிக்க நம்மிடம் ஏதுவுமே
பரிசுத்தமாக இல்லையென
தேம்பி அழுவார்
குற்றவுணர்ச்சியென்றாலே
எனக்கு
அலர்ஜி
குரு
தனியாக வசித்த மலையடிவாரத்திற்கு
இந்த முறை
போக முற்பட்டபோதே
ஏதோ ஒரு சஞ்சலத்தில்
மனம் ஆட்பட்டிருந்ததை உணர்ந்தேன்
அங்கே சென்றபோது
அவரைக் காணோம்
தீராத தனிமை சூழ் கொண்டிருந்தது
அதையும் மீறி
இரண்டு நாள்
அடிவாரத்தில்
பறவைகளின்
கீச்சொலிகளால் ஆசிர்வதிக்கப்பட்டேன்
வீடு திரும்புகையில்
குளிக்க ஆற்றில் இறங்குகையில்
ஒரு காகம்
எனக்கு முன்பாக ஆற்று
நீரில்
நின்றதும்

குரு இறந்துவிட்டதை உணர்ந்தேன்



பூமியின்
குழந்தைகளுக்குப் பரிசளிக்க
பரிசுத்தமாக இருந்த
ஒரே ஒரு கடைசி உயிரையும்
இழந்து விட்டேன்
இவ்வளவு
பெரிய தன்னந் தனிமையை
அடிவாரத்தில் விட்டு விட்டு
வீடு திரும்பவியலாது

அப்படியே திரும்பினாலும்
வெறுங்கைகளோடுதான்
செல்ல வேண்டி வரும்

குழந்தைகளுக்குப் பரிசளிக்க
என்னிடம் ஏதுமே பரிசுத்தமாக இல்லை

(தொடர்ச்சி 59ஆம் பக்கம்)

(56ஆம் பக்கத் தொடர்ச்சி)

ஆற்றில் மிதக்கிறது
தனிமையில் தேம்பி அழுது வாழ்ந்த
ஒரே ஒரு பரிசுத்த இலை

## 6. காலடி

ஒரு
காலை
எப்படி விடிகிறது
பழைய அழுக்குகளின்
ஒரு சொட்டு கூட இல்லை
பச்சிளம் குழந்தையின்
உள்ளங்கை மலர்
எவ்வளவு பரிசுத்தமோ
அவ்வளவு
கனிவாக உள்ள ஒரு காலையை
தொடும் போது
எத்தனை விநோத மலர்களின்
நறுமணம்
ஒரே கணத்தில் அரவணைக்கிறது
அதில் தங்கள் குரல்களை
பாய்ச்சுகிற பறவைகளுக்கு
எத்தனை ஆனந்தம்
இத்தனை
துயர வாதைகளுக்கும்
மீறி
இந்தக் காலையின் மீது
இவ்வளவு பரிசுத்தப் பேரழகு
எங்ஙனம் வழிந்தது
நேற்றைய காலையின்
ஒரு சாயலுமில்லாத
இந்தக் காருண்யம்
இவ்வளவு ஈரமானதிற்கு
யாருடைய கண்ணீர் காரணம்
மஹா அன்பும்
நீடிய சாந்தமுமுள்ள
தெய்வீகமான
இந்தக் காலை
எத்தனை
தாவர ஜீவ ஜந்துக்களுக்கு
புத்தம் புதிய குருதியை அருளியுள்ளது
இயற்கையின்
மாபெரும் கொடையின் முன்
ஒரு குட்டித் தவளை
இந்தப் புல்வெளியில்
எம்பி எம்பி குதிக்கும்
இந்த வேளையில்
என் அழுக்குப் படிந்த
சாம்பல் கண்கள்
ஆசிர்வதிக்கப்பட்டுள்ளது
ஸ்வெட்டர் அணிந்த
வயதான கோதுமை நிற கூர்க்க
சைக்கிள் பெடலை மெதுவாக
மிதித்தபடி
கண்ணயர்ந்து தூங்கும்
இந்தக் காலையை
தன் விசிலை ஊதி எழுப்பும்
இந்தத் தருணம் வரை
அது கடலின் அமைதியால்
சூழப்பட்டுள்ளது
இதில்
ஒருவர் தன்
காலடியை வைக்கும் போது
அவர் கால்கள் தவறுதலாக
ஒரு ஈ எறும்பின் மீதும்
பட்டு விடக் கூடாது
யார் காதிற்கும் கேட்காத
மிகவும் சிறிய அழுகை
அதிகாலையின்
செவிகளுக்கு
கேட்டு விடும் பட்சத்தில்
மலரினும்
மெல்லிய காலை துடிதுடிக்க
பறவைகளனைத்தும்
பறந்து போய்விடும்
பறவைகளுடன்
மிதக்காத
ஒரு தன்னந் தனியான காலை
நமது தலை மீது உதித்து விட்டால்
ஆன்மா வறண்டு விடும்
வேண்டாம்
அதை நமது குழந்தைகள்
தாங்க மாட்டார்கள்



**பாலை நிலவன்** <jaishreemotors123@gmail.com>

# தொழிற்சேவையும் கலைச்சேவையும்

விட்டல்ராவ்

நடிப்பது, பாடுவது, ஆடுவது, சித்திரம் வரைவது, நாடகத்துக்கோ பத்திரிகைகளுக்கோ கதை எழுதுவது என்பதெல்லாம் நம்மில் இயல்பாகவே உண்டானவை. கற்பித்தல், பயிற்சி, ஆசான், வழிகாட்டி என்பது அதன்பிறகு உண்டான பிற்சேர்க்கை. இவை நிறைய. அந்த வகையில் பொதுத்துறை மற்றும் தனியார் துறை நிறுவனங்களில் பணிபுரிவோர் தம் இயல்பிலான கலையார்வத்தை வெளிப்படுத்த ஏதுவாக, அவ்வந்த துறையின் மனமகிழ் மன்றங்கள் பங்காற்றுகின்றன. பொதுத் துறைகளில் ரயில்வே, பாதுகாப்பு, காவல், தபால் தந்தி தொலைப்பேசி, ஏஜி அலுவலகங்களின் மனமகிழ் மன்றங்கள் கலைஞர்களைக் காலந்தோறும் ஊக்குவித்து வெளிக்கொணர்ந்த வண்ணமிருக்கின்றன. சென்னை தொலைப்பேசியும் அந்த வகையில் நின்று குறிப்பிடத்தக்க சாதனைகளைப் புரிந்திருக்கிறது.

இரண்டாம் உலகப் போரின் போது தமிழ் நாட்டின் அன்றைய முன்னணி சினிமா, நாடகக் கலைஞர்கள் மற்றும் இசைக் கலைஞர்களும் தத்தம் வழியில் கலை நிகழ்ச்சிகளை நடத்தி, வசூல் பணத்தை உலகப்போர் செலவுக்கு யுத்த நிதியாக பிரிட்டிஷ் அரசாங்கத்திடம் அளித்திருக்கும் விஷயம் வரலாறு ஆகிறதென்றால், தொலைப்பேசி ஊழியர்களும் தம் கலை ஆளுமையைக் கொண்டு கலை நிகழ்ச்சிகள் நடத்தி நிதி வசூலித்து யுத்த நிதிக்கு அளித்திருக்கிறார்கள். *1940*களில் 'போஸ்ட் அண்ட் டெலிகிராப் இலாகா' (அன்று தொலைப்பேசியும் இதனுள் அடங்கும்) நாடகச் சங்கம் (Drama Soviety) என்று ஒன்றைக் கொண்டிருந்தது. அச்சங்கத்தின் தொலைப்பேசி கலைஞர்கள் உள்ளிட்ட கலைக் குழு, 'வசந்திகா' என்ற தமிழ் நாடகத்தை *24-3-1941* அன்று நடத்தி, வசூலான தொலையை இரண்டாம் உலகப் போரின் சண்டை விமானங்களுக்கான நிதிக்கு பிரிட்டிஷ் அரசிடம் அளித்தது. இந்த நாடக நிகழ்வு எனக்குக் கிடைத்த தொலைப்பேசி வரலாற்றுத் தகவல் படி, சென்னை தொலைப்பேசி ஊழியர்களால் நிகழ்த்தப்பட்ட நாடகமாகும்.



*60*களின் மத்தியில் சென்னைத் தொலைப்பேசி மனமகிழ் மன்றம் சார்பாக நாடக நிகழ்வு ஒன்று 'டெலிஃபோன் ஹவுஸ்' வளாகத்தில் விமர்சையாக நடந்தது. அன்றைக்கு தொலைப்பேசியின் நாடக ஆக்கம் என்றால் மூவர் பிரபலமானவர்கள். நாடக ஆசிரியரும் நடிகருமான சா. ராயப்பன்; நாடக ஆசிரியர், இயக்குநர் சந்திரபாணி; நடிகர் மோதிராவ். இவர்களில் மோதிராவ் நல்ல முகவெட்டும் திறமையும் உடையவராயிருந்தவர். பின்னாட்களில் ஓரிரு திரைப்பட வாய்ப்புகளையும் தொலைக்காட்சி நாடகங்களில் நடிக்கும் வாய்ப்பையும் பெற்றவர். மோதிராவ் எழுதி இயக்கி நடித்த நாடகம் அன்று மேடையேறினபோது அவரது வற்புறுத்தலால் நானும் நகைச்சுவைப் பாத்திரமொன்றை ஏற்று நடித்தேன்.

சந்திரபாணி சற்று வித்தியாசமானவர்; அவரது நாடகங்களும் வித்தியாசமாய் இருந்தன. தீவிரமான தியேட்டர் அமைப்பு, தியேட்டர் இயக்கங்களில் ஆழ்ந்த ஆர்வம் காட்டியவர். ஒரு சமயம், கவிஞர் ஆனந்தின் தந்தை ஒய்.ஆர்.கே. சர்மாவிடம் டெல்லியில் இருந்து வெளிவந்துகொண்டிருந்த தியேட்டருக்கான அரிய இதழ் 'ணிழிகிசிஜி'இன் சில பிரதிகளைக் கேட்டேன். அப்போது அவர் மடிப்பாக்கத்தில் சந்திரபாணி குடியிருந்த பகுதியில் இருந்தார். "எங்கிட்டேயிருந்த இருந்த 'ணிழிகிசிஜி' எல்லாத்தையும் ஓங்க டிபார்ட்மெண்ட் சந்திரபாணி எடுத்துட்டுப் போயிட்டார். திரும்பி வர்லே" என்றார்



சர்மா. மோதிராவும் சந்திரபாணியும் டெலிபோன் டெக்னீசியன்கள்.

சா. ராயப்பனை அன்பு, மதிப்பு, பெருமை, அந்நியோன்யம் மேலிட்டு பலர் 'சாராயப்பன்' என்று அழைப்பதில் சிரித்து மகிழ்வார்கள். சாராயத்துக்கும் ராயப்பனுக்கும் எவ்வித சம்பந்தமும் அறவே கிடையாது. அவர் நிர்வாகத் துறையில் தலைமை எழுத்தராக பணியாற்றியவர். ராயப்பனின் நாடகங்களில் சிறந்ததாகச் சொல்லப்பட்ட ஒன்று, 'பூவும் பொட்டும்'. கிட்டதட்ட இதே கதைதான் ஸ்ரீதரின் நாடகத்தில். ராயப்பன் கதாநாயகனுக்கு கடுமையான காச நோய்; 'நெஞ்சில் ஓர் ஆலயம்' கதாநாயகனுக்குப் புற்றுநோய். மற்றபடிக் கதை வடிவில் இரண்டும் ஒரே மாதிரியானவை. படம் வெளிவந்தவுடன் ஸ்ரீதரின் சினிமா தன் கதை என்று கூறி, தன் அனுமதியின்றி சினிமாவாக எடுக்கப்பட்டதென நீதிமன்றத்தில் வழக்காட முடிவு செய்தார், ராயப்பன். ஸ்ரீதர் தரப்பில் ராயப்பனோடு தொடர்புகொண்டு நீதிமன்றத்துக்குப் போகவேண்டாம்; சமாதானமாக ஒரு முடிவுக்கு நமக்குள் பேசிவிடலாமென சொல்லியும், உடனிருந்த நண்பர்களின் தூண்டுதலால் ராயப்பன் நீதிமன்றத்தில் கேஸ் போட்டதாகவும், ஆனால், வழக்கில் ஸ்ரீதருக்கு சாதகமாய் தீர்ப்பானது என்றும் தொலைப்பேசி வட்டாரத்தில் பேச்சு.

நான் தொலைப்பேசி இலாகாவுக்குள் நுழையமுன் நடந்த இச்சம்பவம் வெவ்வேறு விதமாயும் வெகு நாட்களுக்கு, ராயப்பனையும் தொலைப்பேசி துறை மனமகிழ் மன்ற நாடகங்களையும் பற்றி நினைவு கூர்கையில் பேசப்பட்டு வந்த ஒன்று.

சென்னை தொலைப்பேசியில் நாடகத்துக்கு இரண்டு வெங்கட்ராமன்கள் முக்கியமானவர்கள். ஒரு வெங்கட்ராமன் நடிகர்; நாடகங்களிலும் ஒரு சில திரைப்படங்களில் சிறு வேடங்களிலும் நடித்தவர்; சீனியர் இஞ்சினீயர்.

மற்றொரு வெங்கட்ராமன் மைலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸின் காரியதரிசி. ஆலிவர் சாலையில் செயிண்ட் இஸபெல் மருத்துவமனைக்கு அருகிலுள்ள 'மைலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸ்' பிரசித்தி பெற்ற கலையரங்கு. நாடகங்கள் கர்னாடக இசைக் கச்சேரிகள், பரத நாட்டியங்கள் தொடர்ச்சியாக நடைபெறும் சபா. வெங்கட்ராமன் இந்த சபாவுக்கு அருகிலுள்ள மைலாப்பூர் தொலைப்பேசி தொடர்பகத்தில் ஆபரேட்டராக பணியாற்றியதால் ரொம்ப சௌகரியமாய் போயிற்று. அவரைத் தேடி பிரபல



சங்கீத வித்துவான்கள் வந்து போவார்கள். சதா தொலைப்பேசி அழைப்புகளாய் வரும். ஓய்வு பெற்ற நீதிபதிகள் கூட சிலர் வந்து போவார்கள். ஒரு சபா காரியதரிசி பதவி மிகவும் செல்வாக்கு மிக்கது. டிசம்பர் இசை விழாவின் போதெல்லாம் நிகழ்ச்சிகள் தீர்மானிப்பதில், வாய்ப்புகளை ஏற்படுத்திக் கொடுப்பதில் சபாகாரியதரிசியின் தயவு நிச்சயம் வேண்டியிருக்கும். கே.எஸ். வெங்கட்ராமன் காலமான போது 'கல்கி' இதழ் புகைப்படத்தோடு அவரது மறைவை வெளியிட்டபோது, மைலாபூர் ஃபைன் ஆர்ட்ஸ் சொசைடியின் காரியதரிசி என்று மட்டுமே குறிப்பிட்டது; சென்னை தொலைப்பேசியில் பணியாற்றி ஓய்வு பெற்றவர் என்பதைக் குறிப்பிடவில்லை.

தூர்தர்ஷன் ஒளிபரப்பிய நல்ல தமிழ் தொலைக்காட்சி தொடர்களில் ஒன்று, 'மணிமேகலை'.இத்தொடரில் களையான முகத்தோடு ஓரளவுக்கு நன்கு நடித்த கீதா ரவிசங்கர் என்ற நடிகையை - ஏன் மணிமேகலை தொடரையே கூட ரசிகர்கள் மறந்து போயிருப்பார்கள். திருமதி கீதா ரவி சங்கர் தொடர்ந்து சபா நாடகங்களிலும் நிறைய தொலைக்காட்சி தொடர்களிலும் முக்கிய பாத்திரங்கள் ஏற்று வெகு இயல்பாகவும் சிறப்பாகவும் நடித்து வருகிறார். இவர் மைலாப்பூர் தொலைப்பேசி இணைப்பகத்தில் உதவிப் பொறியாளர் அலுவலகத்தில் குமாஸ்தாவாகப் பணியாற்றினார். பின்னாளில் திரைப்படங்களிலும் இவர் நடித்திருக்கிறார்.

தொலைப்பேசி துறை, இந்தியத் தபால் தந்தி இலாகாவுக்குள் அடங்கியிருந்த சமயம், 1966இல் அகில இந்திய ஓவியப்போட்டி ஒன்றை ஹைதராபாத்தில் நடத்தியது. அதில் கலந்துகொண்ட எனது நீர்வண்ண ஓவியம் அகில இந்திய அளவில் இரண்டாம் பரிசு பெற்றது. அதைக்கேட்டு எனது ஆசான்கள் ராணி பூவய்யா, அந்தோணி தாஸ், சுரேந்திரநாத் ஆகியோரும் அன்றைய ஸ்கூல் ஆஃப் ஆர்ட்டின் முதல்வர் கே.சி.எஸ். பணிக்கரும் பெரிதும் பாராட்டி உற்சாகப்படுத்தினார்கள். செய்திகிடைத்ததும் அன்றைய தொலைப்பேசி பொது மேலாளர் சி.ஜே.க்ளெமெண்ட் என்னைப் பார்க்க விரும்பி அழைப்பு விடுத்தார். அவரை சந்தித்தபோது என்னைப் பாராட்டிவிட்டு, அவ்வாண்டு மனமகிழ்கின்ற ஆண்டு விழாவில் என் ஓவியங்களைக் காட்சியில் வைக்க முடியுமா என்று கேட்டார். இருபது

படங்கள் கொண்ட ஓவியக் காட்சியை வைக்கலாம் என்றேன். அதற்கான எல்லா வசதிகளையும் அவர் செய்து தந்தார்.

எழும்பூர் 'தினத்தந்தி' அலுவலக மைதானத்தில் மாபெரும் பந்தலிட்டு நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன. பந்தலுக்கான மரத்தூண்களில் ஆணியடித்து எனது ஓவியங்களை மாட்டி வைத்தேன். ஆயில் பெயிண்டிங்ல் வாட்டர் கலர் ஓவியங்கள், கோட்டோவியங்கள் மற்றும் பதிப்போவியங்கள் என 22 படங்கள். அவற்றில் நவீன ஓவியங்களாக ஓரிரு ஆண் - பெண் நிர்வாண ஜோடிகளை (மைதுனா) தீட்டியிருந்தேன்.

தொலைப்பேசி ஊழியர்களில், பெரும்பான்மை ஆண், பெண்களுக்கு அவைதான் பெரிய விஷயமாய், ஆர்வமூட்டுவதாய், அருவருப்பூட்டுவதாய், கிளர்ச்சிகரமாய், அசிங்கமானதாய், கிளுகிளுப்பூட்டுவதாய் பட்டிருந்தது. பொது மேலாளர் க்ளெமெண்ட் மங்களூர் பக்கத்து ஆங்கிலோ-இந்தியர். தம் ஆங்கிலோ-இந்திய மனைவியுடன் வந்தவர் என்னைத் தம் மனைவிக்கு அறிமுகப்படுத்தியதோடு ஓவியங்களை மிகவும் ஆழ்ந்து ரசித்தார். ஓர் இயற்கைக் காட்சி ஓவியத்தை அவர்களுக்குப் பரிசளித்தேன்.

சென்னை தொலைப்பேசி படைப்பெழுத்தாளர்கள் வரிசையில் திரு. ரா. சேஷாத்திரியும் திரு. இலந்தை சு. ராமசாமி காந்தனின் நெருங்கிய நண்பர். ஆனந்த விகடனிலும் தினமணி கதிரிலும் முத்திரைக் கதைகளையும் நட்சத்திரக் கதைகளையும் எழுதியிருப்பவர். டைரக்டர் ஆஃப் விஜிலன்ஸ் என்ற உயர் பதவி வகித்து ஓய்வு பெற்றவர். இலந்தை சு. ராமசாமி 'அமுதசுரபி', 'கலைமகள்', 'கல்கி' இதழ்களில் கதைகள் எழுதியவர். மக்கள் தொடர்பு அதிகாரியாயிருந்து ஓய்வு பெற்றவர். இவர் மனமகிழ் மன்றத்தின் பொறுப்பை ஏற்றிருந்த சமயம் சில முன்னேற்றங்களை மேற்கொண்டார். ஒவ்வொரு பொதுத்துறை நிறுவனமும் தனியார் நிறுவனமும் தனக்கென 'இல்லப் பத்திரிகை' (Home Magazine) கொண்டிருக்கும். மாதமொரு முறையோ காலாண்டு கணக்கிலோ வெளிவரும். அவ்வந்த துறை - அலுவலகம் சார்ந்த நிர்வாக மாறுதல்கள், கலை இலக்கிய காரியங்கள், பணி உயர்வு, ஓய்வு, நிதியுதவி, மரணம், விளையாட்டு என்று பல்வேறு செய்திகளையும் தாங்கிவரும். அந்த வகையில் சென்னை தொலைப்பேசியின் இல்ல இதழ் 'TELE NEWS.' ஏனோதானோ என்றிருந்ததை இலந்தை சு. ராமசாமி உயிரோட்டம் நிறைந்ததாய் மாற்றியமைத்தார். முதன்முறையாக, 'இவரைத் தெரிந்துகொள்ளுங்கள்' என்ற தலைப்பில் சென்னை தொலைப்பேசியில் பணியாற்றும் நடனக் கலைஞர், இசைக் கலைஞர், நாடக - திரைப்பட கலைஞர்கள், எழுத்தாளர்கள், விளையாட்டு வீரர்கள் ஆகியோரைப் புகைப்படங்களோடு நீண்ட பேட்டி கண்டு வெளியிடக் காரணமாயிருந்தார்.

எனது பெரிதும் பேசப்பட்ட நாவல் 'நதிமூலம்' வெளிவந்திருந்த சமயம் அது. என்னையழைத்து நீண்ட பேட்டியெடுத்து, இலாகாவின் புகைப்படக்காரரைக் கொண்டு படமெடுத்து வெளியிட்டது 'டெலி நியூஸ்'. இலந்தை சு. ராமசாமி எடுத்த பேட்டியின் போது எனக்குத் துணையாக உடன் வந்திருந்த சா. கந்தசாமி, பேட்டியின்போது புகைப்படக் கலைஞருக்கு என்னைத் தகுந்த கோணங்களில் படமெடுக்கு யோசனைகள் தந்தபடியிருந்தார்.

இலந்தை ராமசாமி பிரபல நாடக, இசை, நடனக் கலைஞர்களை வரவழைத்துச் சிறப்புச் சொற்பொழிவுகள் ஆற்ற ஏற்பாடு செய்தார். அந்த வரிசையில் இலந்தையார் செய்த முயற்சியில் பிரபல நாடகக் கலைஞர் திரு. எஸ்.வி. சகஸ்ரநாமம் அவர்கள் வருகை தந்து, தம் நாடக - சினிமா அனுபவங்களிலிருந்து சிலவற்றைச் சுருக்கமாகவும் செறிவாகவும் எடுத்துப் பேசினார்.

70களில் சென்னை தொலைப்பேசி மட்டுமல்ல, இந்திய தொலைப்பேசி துறை மொத்தமுமே பொது மக்களின் - வாடிக்கையாளர்களின் நன்மதிப்பைக் கொஞ்சம் கொஞ்சமாக இழக்கத் தொடங்கியது. அதற்கான பன்முனை அடிப்படைக் காரணங்கள் சிலவற்றை பொதுத் தொடர்பு - நிர்வாக - உயர் அதிகாரிகள் செயல்பாட்டுத் தொழிற் சங்கக் காரியங்கள் ரீதியாக பின்வரும் பக்கங்களில் பேச முயல்வோம்.

சாம் பிட்ரோடா எனும் வெளிநாட்டு டெக்னாலஜி மூளையும் செயல்திறனும் அனுபவமும் மிக்க மனிதரின் அறிமுகம் - தொடர்பு - நுழைவு என்பவை, இந்திய தொலைப்பேசியின் சகல கட்டமைப்பையும் மாற்றுகிறேன் பேர்வழி என்று வருகை புரிந்ததையடுத்து, நூற்றாண்டைக் கடந்த ஸ்ட்றோஜர் - கிராஸ்பார் வகை தொலைப்பேசி முறை விரைவான மரணத்தை நோக்கிப் பயணிக்க 'எலெக்ட்ரானிக் எக்ஸ்சேஞ்சுகள்' இடம்பிடித்துக் கொண்டன.

பழைய முறை எக்ஸ்சேஞ்சுகளில் எப்படியும் அறுபதுக்கு குறையாது. ஊழியர்கள் இருப்பார்கள். காண்டீன் வசதியிருக்கும். வேலையும் இறுக்கமாகச் சரியாயிருக்கும். எலெக்ட்ரானிக் வகை தொடர்பகங்களும் கம்ப்யூட்டர் முறை வேலையமைப்பும் பெருகவும், ஊழியர்களின் பணியில் மாற்றம் நிகழ்ந்தது. கொஞ்சம் ஆட்களிருந்தால் போதுமென்றானது. ஒவ்வொரு பணியிடத்திலும் ஊழியர்கள் உபரியாகத் தோன்றினர்.

இந்த சமயத்தில் நாடக ஆக்கம், மேடையேற்றம் இதர பொழுதுபோக்குகள் பெருகின. மைலாப்பூர் எக்ஸ்சேஞ்சில் பல்வேறு கலை நிகழ்ச்சிகள், எக்ஸ்சேஞ்சு ஆண்டு விழா கூட்டம், பல்சுவை கலை நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்யப்பட்டன. வாடிக்கையாளர்களிடம் டிக்கட்டுகள் விற்று விழாவுக்கு நன்கொடை வசூலிக்கப்பட்டது. அத்தோடு கோடை நாடக விழா என்ற பேரில் சென்னை தொலைப்பேசியின் சகல பிரிவுகளிலுள்ள நாடகக் கலைஞர்களின் பல்வேறு நாடக ஆக்கங்கள் போட்டிக்கு ஏற்கப்பட்டு சிறந்தவற்றை நகரின் சபாக்களில் மேடையேற்றித் தகுந்த நடுவர்களைக் கொண்டு பரிசும் அளிக்கப்பட்டன. சென்னை தொலைப்பேசியின் அந்திய காலத்தில் இக்கலை நிகழ்ச்சிகள் வர இருப்பதை அறியாமல் நடந்து புகழ்பாடின.

(தொடரும்)

## கலாப்ரியா

# அமங்கலம் அருசி அப்பட்டம் அதிர்ச்சி

### ஷங்கர்ராமசுப்ரமணியன்

மேல்நிலைப் பள்ளிக் கல்வியை முடிக்கும்போது மு. மேத்தா, அப்துல் ரகுமான், வைரமுத்து வழியாக கவிதை வடிவம் அறிமுகமானது. கல்லூரி முதல் ஆண்டில் சேர்ந்தபோது அறிமுகமான லக்ஷ்மி மணிவண்ணன், அவர் வழியாக எனக்கும் தளவாய்க்கும் கிடைத்த சுந்தர ராமசாமி வழியாக எழுத்து மரபைச் சேர்ந்த கதைகளையும் கவிதைகளையும் ஒரு பாடத்திட்டம் போல படிக்கத் தொடங்கினோம். ந. பிச்சமூர்த்தி, நகுலன், பசுவய்யா, ஞானக்கூத்தன் ஆகியோரின் கணிசமான கவிதைகளை சுந்தர ராமசாமியின் வீட்டு நூலகத்திலிருந்து எடுத்துச் சென்று படித்தேன். காலச்சுவடு சிறப்பு மலர் வழியாக, தமிழில் அப்போது இயங்கிவந்த பெரும்பாலான கவிஞர்களின் பெயர்களை அதில் பிரசுரமாகியிருந்த கவிதைகள் வழியாகத் தெரிந்துகொண்டேன். வாழ்க்கை குறித்து அப்போது எனக்கு அன்னியமாகவும் எனது அப்போதைய வயதுக்கு அடையாளம் கொள்ளமுடியாமலும் அந்தக் கவிதையின் வெளிப்பாடும் மொழியும் மூட்டமான ஒரு உணர்வை என்னிடம் உருவாக்கியிருக்க வேண்டும்.

ந. பிச்சமூர்த்தி எனக்கு இன்றைக்கும் அதேவிதமான ஒட்டாத உணர்வையே தருகிறார். பிச்சமூர்த்தியின் சிறுகதைகள் இன்றும் தரும் உத்வேகத்தை எனக்கு அவர் கவிதைகள் தரவில்லை. பசுவய்யாவின் பெரும்பாலான கவிதைகள் சிந்தனை போலத் தோன்றும் எண்ண, விசாரக் குறிப்புகளாகவே எனக்குத் தோன்றுகின்றன. பிரமிளின் கவிதைத்தொகுதி அப்போது அச்சிலேயே இல்லை. நகுலனும் ஞானக்கூத்தனும் பின்னரே எனக்குத் தங்கள் உலகத்தைத் திறந்து காட்டினார்கள்.



வயோதிகச் சடவும் புகைமூட்டமும் மந்தமும் கொண்ட வடிவமோ புதுக்கவிதை என்ற உணர்வு எனக்கு வெளிப்படுத்த முடியாமல் இருந்திருக்கலாம். காவ்யா பதிப்பகம் வெளியிட்ட 'கலாப்ரியா கவிதைகள்' தற்செயலாக சுந்தர ராமசாமியிடமிருந்து கிடைத்தது. திருநெல்வேலிக்கு ஆசையோடு அதை எடுத்துச் சென்றேன். கவிதையை வடிவமாகத்தேர்ந்துகொண்டு, ஆனால் என் கவிதைக்கு உத்வேகமோ உருவகமோ கிடைக்காமல் இருந்த நிலையில், என் அகத்தின் சுவரை உடைத்துக் கொண்டு முதியவர்களின் சாய்வு நாற்காலிகளைப் பறக்கவிட்டுக் கொண்டு அதிரடியாக நுழைந்தார் கலாப்ரியா. சினிமாவில் ரஜினிகாந்த் எப்படி உற்சாகமாக அறிமுகமாவாரோ அப்படி, மனோவைதிகத்துக்குள் ஆட்பட்டிருந்த என் உலகத்தை, என் அடக்கப்பட்டிருந்த வன் உணர்வை அங்கீகரித்து, அதையும் கவிதை ஏற்கும் என்பதை உக்கிரமாகச் சொன்னவர் கலாப்ரியாதான். அதனால்தான் கலாப்ரியா என்றும் எனக்குள் நிலைத்த நாயகன்.

கவிதைகளில் எப்போது மாற்றம் வரும்போதும் அதன் மூலப்படிவங்களாக ஞானக்கூத்தனும் கலாப்ரியாவும் தவிர்க்க முடியாமல் இருப்பார்கள். தொண்ணூறுகளின் ஆரம்பத்தில் தொடங்கி ஒரு மரபாகிவிட்ட தலித் கவிதையில் கலாப்ரியாவின் தாக்கம் பொதிந்திருக்கிறது. கலாப்ரியா உத்வேகம் பெறுவது ஞானக்கூத்தனிடத்தில்.

கலாப்ரியா என்னை ஈர்த்ததில் கவிதை அல்லாத இன்னொரு முக்கியமான காரணம் அவர் எழுதிய திருநெல்வேலி எனக்கான ஊர் அடையாளமாகவும் இருந்ததுதான். நான் வசித்த, நான் திரிந்த தெருக்களில் சற்று முன்னர் இருந்துவிட்டுப் போன ஒருவன் எழுதிய கவிதைகள் இவை; எனக்குத் தெரிந்த சித்தியையும் அத்தையையும் சற்றே முன்பு பார்த்து எழுதியவனின் கவிதைகள் இவை; எனக்கு முன்னர் எழுதப்பட்டாலும் நான் உணரும் இழப்பையும் நான் உணரும் துக்கத்தையும் நான் உணரும் தவிப்பையும் நான் உணரும் ரௌத்திரத்தையும் நான் வைத்திருக்கும் சிறுமைகளையும் தக்கவைத்துக் கொண்டு அங்கீகரிக்கும் கவிதைகள் இவை; இப்படி அடையாளம் கண்டது முதலில் கலாப்ரியா கவிதைகளில் தான்.

'மற்றாங்கே' தொகுப்பின் முதல் கவிதைகளில் ஒன்றான 'பிற்பகல்' கவிதையைப் படித்தபோது ஏற்பட்ட அதிர்வு இன்றும் ஞாபகத்துக்கு வருகிறது. மருத மரநிழல்கள் மீட்டாத தண்டவாளங்கள், அங்கே ஆறுதலுக்காகச் செல்லும் எங்கள் தனிமையின் சோகத்தைப் பகிரத் தொடங்கியிருந்தது. யாரும் பொதுவாக உணரும் ஊர்த்தன்மையும் ஊர் பண்பாடும் வீடுகளில் புழங்கும் உரையாடலும் சத்தமும் புதுக்கவிதையில் அவர் மூலமாகத்தான் அபூர்வமாகச் சேர்ந்தன. எல்லாரின் பால்யத்தையும் பிராயத்தையும் நினைவூட்டக் கூடிய நுண்விவரங்களுமாக தமிழ் மொழியின் செவ்வியல் குணத்தையும் தக்கவைத்துக் கொண்டவர் கலாப்ரியா. எழுத்து மரபும் வானம்பாடி மரபும் சரியாக எதிர்கொண்டு உரையாடி வெற்றிபெற்ற முதல் தமிழ் தன்னிலை கலாப்ரியா.

காயங்களுடன் கதறலுடன் ஓடி ஒளியுமொரு



பன்றியைத் தேடிக் கொத்தும் பசியற்ற காக்கைகள் என்ற சித்திரத்தை, ஒரு பெண் பார்க்கும் பார்வைக்கு ஒப்பாக வைக்கிறார். பசியற்ற காக்கைகளாய் காயங்களுடன் கதறலுடன் ஓடி ஒளியும் நம்மை எத்தனை துயரங்களும் பைத்தியமும் வாதைகளும் துரத்தியிருக்கின்றன. மாறும் உலகின் வீதி ஒன்றில் மாற்றத்துக்கு தன் தலையைப் பிளந்து திறந்து மாற்றத்தின் காகங்கள் தன்னை வலியோடு கொத்த அனுமதித்தவர் கலாப்ரியா. தனக்குப் பிரத்யேகமாக நடந்த துயரத்தின் பின்னணியில், உலகத்திலிருந்து அவர் தன்னைச் சுருக்கி ஒடுக்கிக் கொள்ளவில்லை. தனது வலியையும் நோய்மையையும் பரிசீலனை செய்துகொண்டே உலகத்தின் அபத்தங்கள், வேறுபாடுகள், அசிங்கங்களோடு விமர்சனத்துடனும் மோதும் வன்மையுடனும் செயல்பட்ட கவிதை உலகம் அவருடையது. அமங்கலம், அருசி, அப்பட்டம், அதிர்ச்சி என கவிதை புறக்கணித்திருந்த அத்தனையையும் அழகுடன் சூடிக்கொண்டவை கலாப்ரியாவின் கவிதைகள்.

கொலு வைக்கும் வீடுகளில்
ஒரு குத்து சுண்டல்
அதிகம் கிடைக்கும் என்று
தங்கச்சி பாப்பாக்களை
தூக்க முடியாமல்
தூக்கி வரும்
அக்கா குழந்தைகள்..!

இந்தக் கவிதையில் வரும் ஓவியம் எனது கவிதை வாசிப்பனுபவத்தில் நிலைத்து இன்னும் இருப்பது. அக்கா குழந்தை என்னும் பதத்தை இயல்பாக உருவாக்கியிருக்கிறார். சினிமா, அரசியல், பாலியல், பத்திரிகைகள் என வெகுஜனப் பண்பாட்டின் அசைவுகள், முணுமுணுப்புகள் அத்தனையும் மனத்தடைகள் இன்றி கவிதைகளில் அனுமதிக்கப்படலாம் என்ற நம்பிக்கையை, கல்வியை, அமைதியாக எனக்கு அளித்தவை கலாப்ரியாவின் கவிதைகள்.

கலாப்ரியா கவிதைகளை வாசித்தவுடன் எனக்குக் கிடைத்த 'உலகெலாம் சூரியன்' தொகுதியும் கலாப்ரியாவை மேலும் நெருக்கமாக்கியது. கலாப்ரியா கவிதைகளை ஒட்டுமொத்தமாகப் படித்துவிட்ட பின்னர் அவரைத் திருநெல்வேலியில் நேரடியாகச் சந்தித்த போது அவ்வளவு பரவசமாக அவரை எதிர்கொண்டேன் என்று ஞாபகத்தில் இருக்கிறது. அவரும் தன் கவிதைகளின் ஆற்றலையும் அதில் உள்ள கல்யாணக் குணங்கள் எல்லாவற்றையும் கொண்டவராகத் தெரிந்தார். கலாப்ரியா கவிதைகள் குறித்து, கவிதையில் கலாப்ரியா கொண்டு வந்த மாற்று அழகியல் பண்பாடு குறித்து, ஜெயமோகன் எழுதிய கட்டுரை எனக்கு இன்றும் உந்துதலாக இருக்கும் கட்டுரை ஆகும். ஒரு கவிஞன் குறித்த திட்டவட்டமான, துல்லியமான வரையறை என்று ஜெயமோகனின் அந்தக் கட்டுரையைச் சொல்வேன். கவிதைகள் குறித்தும் ஒரு கவிஞனின் ஒட்டுமொத்த கவிதைகள் குறித்து அவதானிப்பதற்கும் எழுதுவதற்கும் முன்னுதாரணமாக இருக்கும் அபூர்வமான கட்டுரைகளில் ஒன்று ஜெயமோகனுடையது.

கலாப்ரியாவின் 'என்னுடைய மேட்டு நிலம்', 'பிரிவுகள்' கவிதையைப் பலமுறை வாசித்திருப்பேன். அந்தக் கவிதை எனக்கு உள்ளே ஆழத்தில் போயிருக்கிறது என்பதை எனது முதல் தொகுதியில் வெளியான 'சிமெண்ட் நிறக்காரில் வருபவர்கள்' கவிதை வழியாக சமீபத்தில் தான் தெரிந்துகொண்டேன். என்னுடைய மேட்டு நிலம் கவிதைதான் வேறுவிதமாக 'சிமெண்ட் நிறக்காரில் வருபவர்கள்' கவிதையாக மாறியிருப்பது எனது சமீபத்திய நிறைவுகளில் ஒன்று.

**ஷங்கர்ராமசுப்ரமணியன்**
<shankarashankara@gmail.com>

# பிரிவுகள்

**கலாப்ரியா**

நாளை இந்தக் குளத்தில்
நீர் வந்துவிடும் -
இதன் ஊடே
ஊர்ந்து, நடந்து
ஓடி(ச்) செல்லும்
வண்டித் தடங்களை
இனி காணமுடியாது
இன்று புல்லைத்
தின்று கொண்டிருக்கும்
ஆடு - நாளை
இந்த இடத்தை
வெறுமையுடன்
சந்திக்கும்.
மேலே பறக்கும்
கழுகின் நிழல் -
கீழே -
கட்டாந்தரையில்
பறப்பதை
நாளை பார்க்க முடியாது.
இந்தக் குளத்தில் நாளை
நீர் வந்துவிடும்.

# சிமெண்ட் நிற காரில் வருபவர்கள்

**ஷங்கர்ராமசுப்ரமணியன்**

அந்த மழைக்கால ஏரி இப்போது
நீர் வற்றியிருக்கிறது
சென்ற வருட மழைக்குப் பின்
தினம்தோறும் காலையில்
நான்கு யுவதிகள் அங்கே
படகு செலுத்த வருவார்கள்
பேருந்தில் பாலம் கடக்கும்
என்னை அவர்களுக்குத் தெரியாது
அவர்கள் சிமெண்ட் நிற காரில்
வருவார்கள்
அந்தக் கார்
மரத்தடி நிழலில்
இளைப்பாறும்
காட்சி அலாதியானது
மழைக்கால ஓடையில் நீர்குறைய
அவர்கள் அங்கே வருவதில்லை
படகு தனியே நின்று கொண்டிருக்கிறது
கோடை முடிவடையும் அறிகுறிகள்
ஆரம்பமாகிவிட்டன
இன்னும் சிலதினங்களில் மழைபெய்யக்
கூடும்
அவர்கள்
சூரியன் வரும்போதே
குதிரைவால் சடையுடன்
ஓடைக்குப் படகு செலுத்த வந்துவிடுவர்
படகு இப்போது தனியே நின்று
கொண்டிருக்கிறது...

